## தமிழகத்தில் பி.ஜெ.பி.

# செல்லாக் காசு அல்ல; செல்வாக்குள்ள கட்சியே!



• மேடையில் தலைவர்கள்.



• சிக்கந்தர் பக்த்

"இது என்ன கட்சி ஸார்?" என்றார் சென்ட்ரல் ஸ்டேஷன் போர்ட்டர்.

கைகளில் காவி – பச்சை நிறங்கள் கலந்த கொடியை வைத்துக் கொண்டு, கட்டுக் கோப்பான அமைதியுடன் தங்களது தலைவர் அத்வானியை வரவேற்கத் திரண்டிருந்த தொண்டர்களைப் பார்த்துத்தான் அந்தக் கேள்வியைக் கேட்டார் போர்ட்டர்.

அவருக்கு விளக்கம் கூறி முடிக்கும் முன், அத்வானியைச் சுமந்து கொண்டு வந்த ரயில், பிளாட்பாரத்தில் நுழைந்தது. அதுவரை அமைதி காத்து நின்ற தொண்டர்கள், தலைவர் மீதுள்ள அன்பினால் காட்டாற்று வெள்ளமாயினர். "அத்வானி வாழ்க!" "பாரத் மாதா கி ஜெய்!" கோஷங்கள் ஸ்டேஷன் கூரையைத் தாக்கின. தொண்டர்களின் அன்பு வரவேற்பில் திக்கு முக்காடிப் போனார் அத்வானி.

பாரதிய ஜனதாவின் தேசிய செயற்குழு, முதல் முறையாகச் சென்னையில் கூடியது. பி. ஜெ. பி. யின் அத்தனை தலைவர்களும் சென்னையில் சங்கமித்தனர். "பி. ஜெ. பி. ஒரு வட இந்தியக் கட்சி. தென்னகத்தில் அதற்குச் செல்வாக்கே வராது' என்று பேசிக் கொண்டிருந்தார்கள். கர்நாடகாவிலும் கேரளாவிலும் எங்கள் கட்சி வேகமாக வளர்ந்து கொண்டிருக்கிறது. எங்கள் தொண்டர்களின் சலியாத உழைப்பினால், தமிழகத்திலும் கட்சியை வளர்த்துக் காட்டுவோம்" என்றார் செயலாளரான மாத்தூர்.

இஸ்லாமிய சமூகத்தைச் சேர்ந்த சிக்கந்தர் பக்த், பா. ஜ. கட்சியின் துணைத் தலைவர். ஜின்னா, மௌலானா அபுல் கலாம் ஆசாத் போன்றோருடன் இணைந்து பணியாற்றியவர். எமர்ஜென்ஸியில் 18 மாதங்கள் சிறையில் இருந்தவர். இவர்

அடுத்த இதழில்...



●● அஞ்சலியாக அசத்தும் ஷாமிலி!

●● குடிநீர் போதவில்லை; சாக்கடை வசதில்லை! திருச்சி — II தொகுதி பற்றிய நமது நேரடி ரிப்போர்ட்

மனைவி ஓர் இந்து.

பாரதீய ஜனதா என்றாலே முஸ்லீம்களுக்கு எதிரான கட்சி என்ற கருத்து நிலவுகிறது அல்லவா! இதுபற்றி சிக்கந்தர் பக்த்திடம் கேட்டோம்.

''நாங்கள் அப்படிச் செயல்படுகிறோம் என்பதற்கு ஏதாவது ஆதாரம் காட்ட முடியுமா? இந்தியக் கலாசாரத்தைப் பேணிக் காக்கும் ஒரே கட்சி பா. ஜ. க. தான். இந்துவோ, முஸ்லீமோ, கிறிஸ்துவனோ... அவன் முதலில் ஓர் இந்தியக் குடிமகன். காஷ்மீருக்கு விசேஷ அந்தஸ்து வழங்கும் அரசியல் சட்டத்தை எடுத்து விட வேண்டும் என்று சொல்கிறவன் முஸ்லீம் விரோதியா? ஒன்றுபட்ட இந்தியாவுக்குள்தானே காஷ்மீர் இருக்கிறது. அப்படியிருக்க அதற்கு ஏன் தனிச் சட்டம்? அதே போல், பொதுவான சிவில் சட்டம் தேவை என்று பி. ஜெ. பி. சொன்னால் சிறுபான்மையினருக்கு விரோதமான கட்சி என்று சொல்கிறார்கள். பிரதமர் நேருவே பொதுவான சிவில் சட்டம் தேவை என்று சொல்லியிருக்கிறார். அரசியல் சட்டத்திலும் உள்ளது. பி. ஜெ. பி. சிறுபான்மையினர் நலக் கமிஷனுக்கு பதில், மனித உரிமைக் கமிஷன் வேண்டும் என்று சொல்கிறது. காரணம், இன்று மத வேறுபாடின்றி அனைவருமே நசுக்கப்படுகிறார்கள்'' என்றார் சிக்கந்தர் பக்த்.

அத்வானிக்குக் 'கல்கி'யின் மேல் கொஞ்சம் வருத்தம். ''என் வீட்டில் பூஜை இல்லையென்று உங்கள் பத்திரிகையில் எழுதியிருக்கிறீர்கள். அது தவறு!'' என்றார் அத்வானி. * அவரது மகளும் சேர்ந்து பலமாக மறுத்தார். நேரத்தைக் கடைப்பிடிப்பதில் குறியாக இருந்தார் அத்வானி. குறித்த நேரத்தில் ஒவ்வொரு நிகழ்ச்சியும் நடந்தேறியது. கடற்கரையில் சுமார் பத்தாயிரம் பேர் கொண்ட கட்டுப்பாடான கூட்டம்.

குவாலியர் ராணி விஜயராஜே சிந்தியா பேசும் போது, தம்மை யாரும் இனிமேல் 'ராஜ் மாதா' என்று அழைக்க வேண்டாமென்று கேட்டுக் கொண்டார்.

அத்வானி நகைச்சுவையுடன் பேச்சை ஆரம்பித்தார். ''1980ல் எங்கள் கட்சி 14 பாராளுமன்ற உறுப்பினர்களைப் பெற்றிருந்த போது, பாராளுமன்றத்தில் ஐந்தாம் எண் அறையை எங்களுக்குக் கொடுத்தார்கள். 1984 தேர்தலில் எங்கள் கட்சி இரண்டு இடங்களைத்தான் பெற்றது. ஆகவே, பெரிய அறையான ஐந்தாம் எண் அறையை விட்டு எங்களைக் காலி செய்யச் சொன்னது அரசு. அந்த அறை முப்பது இடங்களைப் பெற்ற தெலுங்கு தேசத்துக்கு ஒதுக்கப்பட்டது. 1989ம் ஆண்டு நடந்த தேர்தலில் பா. ஜ. க. 90 இடங்களைப் பெற்றது. ஆனால் தெலுங்கு தேசம் இரண்டு இடங்களைத்தான் பெற்றது. இப்போது எந்தக் கட்சியும் பாராளுமன்றத்தில் உள்ள ஐந்தாம் எண் அறையை எடுத்துக் கொள்ளத் தயங்குகிறது. அதனால் அமைச்சர் உபேந்திராவிடம், 'எப்படியாவது காங்கிரஸ் கட்சிக்கு அந்த அறையைக் கொடுத்து விடுங்கள். அடுத்த தேர்தலில் இரண்டு இடங்கள்தான் அந்தக் கட்சிக்குக் கிடைக்கும்!' என்று நான் சொல்லியிருக்கிறேன்'' என்று முடித்தவுடன் கூட்டத்தில் சிரிப்பு அலை.

வாஜ்பேயி பேச்சிலும் வழக்கம் போல் நகைச்சுவை கலந்தோடியது. 'சமீபத்தில் நிகழ்ந்த அரசியல் நெருக்கடிக்குப் பிறகு நாங்கள் மிகவும் வலிமையாகி விட்டோம்' என்று பிரதமர் சொன்னாரல்லவா! அதைக் குறிப்பிட்ட வாஜ்பேயி, ''தங்களை மேலும் பலமுள்ளவர்களாக்கிக் கொள்ள மற்றும் ஒரு நெருக்கடியை ஜனதா தளத் தலைவர்கள் வரவழைத்துக் கொள்ள மாட்டார்கள் என்று நம்புவோமாக!'' என்று சொன்னவுடன் கூட்டத்தில் ஒரே கலகலப்பு!

— ப்ரியன்.

படங்கள்: கண்ணன், ரங்கராஜன்.

* அத்வானியின் குடியிருப்பு ஆடம்பரமற்றது; அடக்கமானது என்பதைச் சுட்டிக்காட்டும் முகமாகப் பூஜை அறை கூட இல்லை என்றுதான் குறிப்பிட்டிருந்தோம்; பூஜை இல்லை என்பதாக அல்ல.

— ஆசிரியர்.

# கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்:

# ரூ.50,000



அடுத்த ஆண்டு இதே நேரத்தில் பொன்விழா ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது கல்கி. விழாக் கொண்டாட்டங்களுக்கு எண்ணி 104 வாரங்களே பாக்கி.

பொன்விழாவையொட்டி எழுத்தாளர்களுக்குப் போட்டிகள் நடத்துகிறோம். வாசகர்களுக்கும் குறிப்பாக மாணவர்களுக்கும் போட்டிகள் உண்டு. இவற்றுக்காக மொத்தமாக ரூ: 50,000 பரிசுத் தொகை அறிவிக்கிறோம்.

கல்கியில் ஓராண்டுக்குத் தொடர்ந்து வரக்கூடிய சரித்திர நாவலுக்குப் பரிசு ரூ. 20,000/—.

ஆறு மாதங்கள் தொடரக் கூடிய சமூக நாவலுக்குப் பரிசு ரூ. 10,000/—.

மூன்று மாதங்கள் இடம் பெறக் கூடிய மர்ம நாவலுக்குப் பரிசு ரூ. 5,000/—.

மூன்று மாதங்களுக்குப் பிரசுரமாகும் விதமாக எழுதப்படும் விஞ்ஞான நாவலுக்கு ரூ. 5,000/—.

இவற்றுக்கு ஓராண்டு அவகாசம் அளிக்கப்படுகிறது.

தவிர, சிறுகதைகள், கவிதைகள், நாடகங்கள் முதலியனவற்றுக்கும் பரிசுகள் உண்டு.

இவற்றுக்கு ரூ. 5,000/— பரிசுத் தொகை ஒதுக்கப்படுகிறது. இதுபற்றிய விவரம் சில காலம் சென்றபின் கல்கியில் இடம் பெறும்.

வாசகர்களுக்கு ரூ. 2500 ம் மாணவர்களுக்கு ரூ. 2500 ம் பரிசுகள் அறிவிக்கிறோம்.

வாசகர்கள் செய்ய வேண்டியதெல்லாம் கல்கி ஆசிரியர் குழாத்தினருக்கு யோசனைகள் கூறுவதுதான். நாளிதழிலிருந்து ஒரு செய்தியைக் கத்திரித்து அனுப்பி, இதை ஆதாரமாகக் கொண்டு ஒரு சிறுகதை எழுதப்படலாமே என்றோ, அல்லது ஒரு குறிப்பிட்ட விஷயம் பற்றி ரசமான தகவல்களைச் சேகரித்து கவர் ஸ்டோரி செய்யலாமே என்றோ, அல்லது, 'எங்கள் கிராமத்தில் இப்படி ஒரு புதுமையான முயற்சி நடக்கிறது; வந்து பார்த்துவிட்டு எழுதுங்கள்' என்றோ யோசனைகள் கூறுவதுதான். ஏற்கப்படும் யோசனை ஒவ்வொன்றும் ரூ. 25 சன்மானம் பெறும். யாருடைய யோசனைகள் மிக அதிகமான அளவில் அடுத்த இரு ஆண்டுகளில் ஏற்கப்படுகிறதோ அவர் பொன்விழா மேடையில் ரூ. 2500/— பரிசு வழங்கிக் கௌரவிக்கப்படுவார்.

மாணவர்களுக்குக் கட்டுரைப் போட்டிகள் நடத்துகிறோம். தலைப்புக்கு ஏற்பக் கட்டுரைகளை வரவேற்று, சிறந்தது பிரசுரமாகி ரூ. 50/— சன்மானம் பெறும். அடுத்த இரு ஆண்டுகளில் எந்த மாணவருடைய கட்டுரைகள் மிக அதிகமாகக் கல்கியில் இடம் பெறுகிறதோ அவர் பொன்விழா மேடையில் ரூ. 2500/— சிறப்புப் பரிசு பெறுவார்!

முதல் தலைப்பு: ''தி. மு. க. ஆட்சி: சாதனைகளும் சோதனைகளும்!'' கல்கியில் இரண்டு பக்கங்களுக்கு மேற்படாமல் எழுதி அனுப்பக் கடைசி தேதி 14.8.90. பள்ளி அல்லது கல்லூரி முகவரி குறிப்பிடவும்.

கல்கி பொன்விழா மேடையில் சிறப்பிடம் பெற மாணவர்களே, முந்துங்கள்!
வாசகர்களே, ஐடியாக்களை நமது காரியாலயத்தில் குவியச் செய்யுங்கள்!
எழுத்தாளர்களே, உடனே சிந்தித்துச் செயல்பட ஆரம்பியுங்கள்!
வாழ்த்துக்கள்!

# 'சமநோக்குப் பார்வை'

நான் நாத்திகத்தையும், ஆத்திகத்தையும் சமநோக்குப் பார்வையில் நோக்குகிறேன்.

— கலைஞர்













கருத்து: ஜாலி

# டாக்டர்களிடம் சில கேள்விகள்...

**கல்கி: ஸ்டீராய்ட் என்றால் என்ன? அதனால் விளையாட்டு வீரர் எவ்வாறு கூடுதல் சக்தி பெற முடியும்?**

டாக்டர் ஜி. எஸ். சுந்தரராஜன்:

சியோல் ஒலிம்பிக் விளையாட்டுக்களின் போது ஓட்டப் பந்தயத்தில் புதிய உலக சாதனை அறிவிக்கப்பட்டது. அரை மணி நேரத்துக்குள் அந்தத் தங்கப் பதக்கம் பறிக்கப் பட்டது. பென் ஜான்சன் மருந்து உட்கொண்டதால்தான் அந்தச் சாதனையைப் புரிந்தார் என்று கண்டுபிடிக்கப்பட்டதே காரணம்!

விளையாட்டுத் துறையில் பெருமளவில் உபயோகப்படுத்தப்படுவது ஸ்டீராய்டுகள் என்ற செயற்கை ஹார்மோன்கள். இவை எப்படிச் செயல்படுகின்றன? உடலில் தசைகள் தனித்தும் கூட்டாகவும் இயங்கும் போது உற்பத்தியாகும் சக்தி, இயங்கும் சக்தியாக மாறி, உடல் அசைவுகளை ஏற்படுத்துகிறது. ஸ்டீராய்டுகள் இந்த இயங்கு சக்தியைப் பெரிய அளவில் உற்பத்தி செய்ய உதவுகின்றன. எரிபொருளை உபயோகிக்கும் திறனை அதிகரித்து, குறைந்த கால அளவில் அதிக அளவு சக்தியை உருவாக்க உதவுகின்றன. ஆகவேதான் ஓட்டப் பந்தயத்திலும் பளு தூக்கும் முயற்சியிலும் ஸ்டீராய்டுகள் பயன்படுத்தப்படுகின்றன.

இந்த மருந்தைத் தொடர்ந்து உபயோகித்தால் இது இல்லாமல் சாதனை புரியும் திறனை விளையாட்டு வீரர் இழக்கிறார். அதனால் திரும்பத் திரும்ப உபயோகிக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளாகிறார். மருந்துக்கு அடிமையாகிறார். இது தவிர வேறு ஓர் ஆபத்தும் உண்டு.

விளையாட்டின் போது அதிக அளவு உஷ்ணம் உற்பத்தியாகிறது. வியர்வை பெருகி ஆவியாவதன் மூலம், இந்த உஷ்ணம் தணிக்கப்படுகிறது. இந்த இயக்கத்தை நிர்வகிப்பது மூளையிலுள்ள ஹைபோதலமஸ் பகுதி. ஸ்டீராய்டு உபயோகித்தால் வியர்வை வருவதில்லை. உடலில் தண்ணீர் தங்குகிறது. உஷ்ணம் வெளியேறுவது தடைப்படுகிறது. ஹைபோதலமஸ் செயலிழந்து, மயக்க நிலை ஏற்படுகிறது. சரியான நேரத்தில் கவனிக்கத் தவறினால் மரணம் கூட சம்பவிக்கலாம்.

இந்த மருந்துக்குப் பழக்கப்பட்டவர்களை மீட்டுக் கொண்டு வருவது ரொம்பக் கஷ்டம். படிப்படியாக மருந்தின் அளவைக் குறைத்து, மனோதைரியம் அளித்து, ஆகார நியமம் காத்து முன்னேற்றம் காண வேண்டும்.

● **"இப்போதெல்லாம் காடராக்ட் ஆபரேஷன் செய்த பிறகு இன்ட்ரா — ஆக்யுலர் லென்ஸ் பொருத்தப்படுகிறதே? இது எதனால் செய்யப்பட்டது? இதன் பணி என்ன?"**

**— எஸ். நாராயணன், நெய்வேலி.**

டாக்டர் ரவீந்திரன்: கண்ணிலுள்ள சதையால் செய்யப்பட்ட ஒரு லென்ஸ் இருக்கிறது. இதன் பணி, பார்க்கும் பொருள்களை ஃபோகஸ் பண்ணுவது. வயதின் காரணமாகவோ, உடம்பிலுள்ள சில நோய்களின் காரணமாகவோ அல்லது அதன் விளைவுகளின் காரணமாகவோ இந்த லென்ஸ் தெளிவற்ற நிலை அடைகிறது. இதனால் பார்வை குறைகிறது. இதற்கு ஒரே மருத்துவம் அந்த லென்ஸை எடுத்து விடுவதுதான். அப்படி எடுத்து விட்டால், ஃபோகஸ் செய்ய மாற்று லென்ஸ் தேவை. மறுபடி மனித லென்ஸ் கிடைக்காத நிலையில், அந்த இடத்தைப் பெறுவது காண்டாக்ட் லென்ஸ், அல்லது மூக்குக் கண்ணாடி அணிவது. மூன்றாவதாக இப்போது இன்ட்ரா — ஆக்யுலர் லென்ஸை ஆபரேஷன் முடிந்த உடனே கண்ணில் பொருத்திக்





"காலேஜில் விரிவுரையாளரா வேலை பார்க்கிற பெண் வேண்டாம்னுட்டு ஒரு எல். கே. ஜி. டீச்சரைக் கல்யாணம் பண்ணிண்டியே, ஏன்?"

"குழந்தை பிறந்ததும் காலேஜிலா கொண்டு போய்ச் சேர்க்கப் போறோம்? எல். கே. ஜி. இடத்துக்குத்தானே அலைய வேண்டி இருக்கு?"

— கரம்.

கொள்ளலாம்.

இதில் பல அனுகூலங்கள் உள்ளன. பார்க்கும் பொருள் சாதாரணமாகத் தெரிவதை விட மூன்று சதவிகிதம் பெரிதாகத் தெரியும். பக்கப் பார்வை (ஸைடு விஷன்) குறையாது. கான்டாக்ட் லென்ஸில், ஏழு சதவிகிதம் பெரிதாகத் தெரியும். ஆனால் தினசரி காலை — மாலை, கழற்றிச் சுத்தம் செய்து அணிந்து கொள்ள வேண்டும். வயதானவர்கள் கைநடுக்கத்தில் சரியாக எடுத்து அணிந்து கொள்ள முடியாது; பிறர் உதவி தேவைப்படும். மூக்குக் கண்ணாடி போட்டால், 33 சதவிகிதம் பெரிதாகத் தெரியும்; ஆனால் பக்கப் பார்வை குறையும். படி ஏறுவது இறங்குவது சிரமம். கண்ணாடியைக் கழற்றி விட்டால் பார்வை தெரியாது.

இன்ட்ரா ஆக்யுலர் லென்ஸ் பிளாஸ்டிக்கினால் ஆனது. நிரந்தரமானது. நிரந்தரக் கண் பார்வையில் எப்படித் தெரியுமோ, அப்படியே தெரியும்.

● **"இன்ட்ரா — ஆக்யுலர் லென்ஸ் பொருத்திக் கொண்டாலும் சிலர் கண்ணாடியும் அணிகிறார்களே?"**

டாக்டர் ரவீந்திரன்: சில குறைந்தபட்ச அட்ஜஸ்ட்மென்ட்டுக்காகக் கண்ணாடி போட வேண்டியிருக்கும். தேவை இருந்தால் மட்டுமே கண்ணாடி அணிந்தால் போதும்.

● **"'சைனஸ்' என்றால் என்ன?"**

**— டி. உலகநாதன், சென்னை.**

டாக்டர் சுப்பு பழனியப்பன்: சைனஸ் என்பது மூக்கைச் சுற்றி அமைந்துள்ள காற்றறைகள். மூக்குக்குப் பக்கவாட்டில், புருவப் பகுதியில், மேல் மூக்குப் பகுதியில், மூக்குக்குப் பின்னால் என்று இந்தக் காற்றறைகள் அமைந்துள்ளன. இவை அனைத்தும் மூக்குடன் தொடர்பு கொண்டுள்ளன. சாதாரணமாகச் சுவாசத்தின் போது காற்று சென்று வரும் அவ்வறைகளில் சில சமயங்களில் சீழ் பிடித்துக் கொண்டால், அங்கேயுள்ள ஜவ்வு வீங்கிக் காற்றோட்டம் தடைப்படும். அதுசமயம் நோய்க் கிருமிகள் தாக்குவதால் சைனஸ் தொல்லை வருகிறது. இதனால் உடம்பின் எதிர்ப்புச் சக்தி மேலும் குறைகிறது. தவிர அலர்ஜியும் சைனஸ் தொல்லைக்கு ஒரு காரணம். தொண்டை வலி, டான்சில்ஸ் இவையும் சைனஸ் தொல்லையால் ஏற்படும். சைனஸ் முற்றினால், உடம்பு முழுக்க அப்படி ஒரு வலி வலிக்கும். எலும்புகளில் துளைகள் ஏற்படும். மூளையைக் கூடப் பாதிக்கக் கூடும். கால்சியம் மாத்திரைகளும், காட்லிவர் ஆயில் காப்சூல்களும் சாப்பிட்டு இந்த நோயிலிருந்து தப்பிக்கலாம். சுடுநீரை ஆவி பிடித்தாலும் ஓரளவு நிவாரணம் கிடைக்கும்.

● **"இருதய அறுவை சிகிச்சை (பைபாஸ் சர்ஜரி)யின் போது, காலில் உள்ள ரத்த நாளங்களை எடுத்துப் பயன்படுத்துவதேன்? மற்ற பகுதிகளில் உள்ள இரத்த நாளங்களைப் பயன்படுத்த முடியாதா?"**

**— குமாரி ஸ்வேதா, சென்னை — 40.**

டாக்டர் சங்கரன்: உடலில் ரத்தத்தை எடுத்துச் செல்லும் நாளங்களில் ஏதாவது தடை இருந்தால் ரத்த ஓட்டம் சீராக இருக்காது. அதனால் தடைப்பட்ட ரத்தநாளப் பகுதிக்குப் பதிலாக, ஒரு புதிய ரத்தநாளத்தைப் பொருத்துவதன் மூலம், ரத்த ஓட்டத்தைச் சீர்படுத்தலாம். இப்படிப் புதிதாய்ப் பொருத்தும் நாளம், உடலின் மற்ற பகுதிகளிலிருந்து எடுக்கப்படாமல், கால் பகுதியிலிருந்துதான் எடுத்துப் பயன்படுத்தப்படுகிறது. இதற்குக் காரணங்களாவன: 1. கால் பகுதியில் ரத்த நாளங்கள் நன்கு நீளமானவை. 2. மற்ற பகுதியிலுள்ள ரத்த நாளங்களுடன் ஒப்பிடுகையில் சற்று அகலமானவை. 3. மிக ஆழத்தில் இல்லாமல், காலில் தோல் பரப்புக்கு அருகிலேயே ரத்த நாளங்கள் அமைந்துள்ளன. மிக மெலிதான பழுதுபட்ட ரத்தக் குழாய்ப் பகுதிக்கு மாற்றாகப் புதிய ரத்த நாளம் மூலமாக ரத்த ஓட்டத்தைத் தடைப்படாதிருக்கச் செய்ய, நுண்ணிய மைக்ரோ சர்ஜரி முறை கடைப்பிடிக்கப்படுகிறது.

டாக்டர்களைப் பேட்டி கண்டு எழுதியவர்கள்: **எஸ். சந்திரமௌலி, நிகிலா ராஜா, சாருகேசி.**

# Gateway to South India

## Leema Palace

**15, Smith Road, Madras - 600 002. Phone: 473081/82**
**Telex: 41-6249 Djs-in Fax: 44-8254710**

Situated in the main artery of Mount Road, LEEMA PALACE is ideally located for business traveller. Just 10 Kms from the Airport and 3 Kms from the Railway Station. The atmosphere at the LEEMA PALACE ensures a perfect settings for the busy businessman. LEEMA PALACE offers luxurious rooms, business facilities like Secretarial, fax and telex services besides the personel touch, warmth and hospitality in the best tradition of LEEL MAHA group of Hotels.



**VENKKAS A/c Banquet Hall**

For Weddings, business meets and large gatherings LEEMA PALACE has complete banqueting and conference facilities.



**LEEL MAHA A/c Vegetarian Restaurant**

LEEMA PALACE has an array of cuisines from all over India. For Rajasthani, Gujarathi, South Indian, North Indian cuisines.





**LEEL MAHA GROUP OF HOTELS**

Neelankarai ☎ 418820 / 419906 | T. Nagar ☎ 8253819 | 15 Smith Road ☎ 473081/82

TLM/1093

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1990 முடிவுகள்...

• நடுவர் குழு பரிசீலித்த போது...

கடந்த 15.7.90 அன்று ஸ்ரீபால், ஜ.ரா. சுந்தரேசன், பாலகுமாரன், திருமதி லவிதா பாரதி, ஆசிரியர் கல்கி ஆகியோரைக் கொண்ட நடுவர் குழு கூடிப் பரிசீலித்துப் பின்வரும் கதைகளைப் பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுத்தது.

●● "சுப்பிரமணியன் பி.ஏ." — ரூ. 1500 முதல் பரிசு பெறும் இக்கதையை எழுதியவர், அறிமுக எழுத்தாளர் 'சத்திய சந்தன்.' (சா. கணேசன், கோவில் தெரு, சியாத்தமங்கை, திருமருகல், தஞ்சை மாவட்டம்.)



• பாலகுமாரன்



• ஸ்ரீபால்

●● "தமிழுக்கு அமுதென்று பேர்" — ரூ. 750 இரண்டாம் பரிசு பெறும் இக்கதையை எழுதியவர்: 'ஜெயபிரபா' (எஸ். வேங்கடரமணி, P. O. Box 10343, 65454 Shuaiba, KUWAIT).

●● "புதிய கல்வெட்டுக்கள்" — எழுதிய ஸ்டெல்லா புரூஸ் (14, முதல் மெயின் ரோடு, ராமகிருஷ்ணா நகர், சென்னை — 28) மற்றும் "புதிய சரித்திரம்" — எழுதிய அறிமுக எழுத்தாளர் ஆர். பாண்டியன் (15, பி. வி. எஸ். கோயில் தெரு, புதுப்பேட்டை, ராயப்பேட்டை, சென்னை — 14) ஆகியோர் தலா ரூ. 375 வீதம் மூன்றாம் பரிசுகளைப் பெறுகிறார்கள்.

●● இவை தவிர, "காந்திபுரத்து ராமுக் கண்ணு" எழுதிய நா. முத்துநிலவன் (2/2, சத்தியமூர்த்தி ஹவுஸிங் யூனிட், புதுக்கோட்டை — 622 001), "கோடு தாண்டிய கோதை" எழுதிய 'ஜனனி' (கே. விஸ்வநாதன், பிளாட் 25, சித்ரகலா காலனி, திருநகர், மதுரை — 6), "மரணம்" எழுதிய டாக்டர் எஸ். சருவர் சாதிக் எம்.டி. (83/84, தேவிபட்டினம் ரோடு, கேணிக்கரை, ராமநாதபுரம் — 623 501) ஆகிய மூவரும் தலா ரூ. 250 வீதம் ஆறுதல் பரிசு பெறுகிறார்கள்.



• திருமதி லவிதா பாரதி



• ஜ. ரா. சுந்தரேசன்

●● மற்றும் பிரசுரத்திற்காகப் பதினைந்து கதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. (விவரங்கள் அடுத்த இதழில்)

●● பரிசு பெற்றவர்களுக்கு வாழ்த்துக்கள். பல்லாயிரக்கணக்கில் கலந்து கொண்டு இப்போட்டியைச் சிறப்பித்த எல்லா எழுத்தாளர்களுக்கும் கல்கி தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

— ஆசிரியர்

படங்கள் : உத்ரா




இலங்கை ராணுவம்

விடுதலைப் புலிகள்

புல்லட் யுத்தம்

அறிக்கை யுத்தம்

நீதான் புலியை உள்ளே விட்டே!

ஈழத் தமிழன்

இல்லை, நீதான்!

எப்போ இவங்க யுத்தம் முடிஞ்சு எப்போ நமக்கு விடியப் போவுதோ?





# கல்கி

1990 ஆகஸ்ட் 5
மலர் : 49 இதழ் : 1
பிரமோதூத ஆடி 20



## பி. ஜே. பி.க்கு நன்றி

பாரதிய ஜனதா கட்சியின் தேசியச் செயற்குழுக் கூட்டம், சென்னையில் மூன்று நாட்கள் நடந்ததானது இரண்டு விதங்களில் முக்கியத்துவம் வாய்ந்தது. முதலாவது தமிழர்களிடையே ஒரு தேசிய நோக்கு வளர உதவியிருக்கிறது.

அ. தி. மு. க. வா, தி. மு. க. வா என்ற நிலைதான் இன்று தமிழகத்தில் நிலவுகிறது. இந்தப் பிராந்தியக் கட்சிகளுக்கு அப்பால் உள்ள காங்கிரஸ், ஜனதா தளம், பி. ஜே. பி. ஆகிய மூன்றுமே இங்கே வலுப் பெறவில்லை. வளர்ச்சிக்கான முயற்சிகளை காங்கிரஸ், ஜனதா தளம் ஆகிய இரண்டும் தீவிரமாக மேற்கொள்ளவும் இல்லை. அவை பிராந்தியக் கட்சிகளுடன் தங்களை இணைத்துக் கொண்டு முதுகு சவாரி செய்வதிலேயே கருத்தாக உள்ளன.

ஆனால் பி. ஜே. பி. அப்படிப்பட்ட கட்சி அல்ல. அது, தனித்தன்மையுடன் அகில இந்திய ரீதியில் செல்வாக்குப் பெற்ற கட்சியாக விளங்குகிறது. நாடாளுமன்றத்தில் 86 இடங்களைப் பெற்றுள்ளது. சில மாநிலங்களிலும் பி. ஜே. பி. ஆட்சி நடக்கிறது. அத்தகைய கட்சி, தென்னாட்டில் தனது செல்வாக்கை வளர்த்துக் கொள்ளவும் விரும்புகிறது. அதன் வெளிப்பாடாகத்தான் சென்னையில் மாநாடு நடத்தியது. எனவே, பிரதேச நோக்குக்கு அப்பாற்பட்ட ஒரு தேசிய சிந்தனை தமிழர்களிடையே வளர இந்த மாநாடு உதவியுள்ளது எனலாம். செடி, தழைத்து வளர்ந்து மரமாகிக் கனிகளைத் தர, பி. ஜே. பி. மாநிலத் தளபதிகள் தொடர்ந்து அயராது உழைக்க வேண்டும்.

இரண்டாவது முக்கியமான விஷயம், இன்றைக்கு மத்தியிலே ஆள்கின்ற, தி. மு. க. உள்ளிட்ட தேசிய முன்னணிக்கு, பி. ஜே. பி. வெளியேயிருந்தபடி ஆதரவு தந்தாலும் அது கண்மூடித்தனமான ஆதரவு அல்ல என்பதை மாநாடு மீண்டும் ஒரு முறை வலியுறுத்தியிருக்கிறது. 'உங்கள் ஆட்சியைக் கவிழ்க்க மாட்டோம்; உங்கள் நண்பர்களாகவே விளங்குவோம்; அதற்காக உங்கள் தவறுகளைச் சுட்டிக்காட்டாமலும் இருக்க மாட்டோம்; கருத்து மாறுபாடுகளை வெளியிடாமலும் இருக்க மாட்டோம்' என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

''உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு''

என்றார் வள்ளுவர். அதே வள்ளுவர்தான்,

''நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு''

என்றும் கூறினார்.

இந்த நுட்பமான விஷயத்தை பி. ஜே. பி. தலைவர்கள் நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். வள்ளுவனைப் பெற்றெடுத்த தமிழகம்தான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை! 'நேற்று எங்கள் தலைவரை ஆதரித்தீர்களே, இன்று எதிர்க்கிறீர்களே? ஒன்றும் புரியவில்லையே? ' என்பது போல்தான் பலர் குழம்புகிறார்கள்! தேவையற்ற குழப்பம்.

'ஆடை நெகிழும் போது சட்டென்று அதைக் கை பற்றிக் கொள்வது போல், நண்பனுக்கு ஆபத்துச் சமயத்தில் உதவ வேண்டும்' என்றார் வள்ளுவர். பி. ஜே. பி. அதைச் செய்திருக்கிறது. சமீபத்தில் ஜனதா தளத்தில் நிலவிய உட்கட்சிப் பூசல்கள் — சூழ்ச்சிகளின் போதுகூட, தனது செல்வாக்கை வன்மையாகப் பிரயோகித்து, ஆட்சி கவிழாதிருக்க, உற்ற நண்பனாக விளங்கி உதவியிருக்கிறது. அதேசமயம், 'சிரித்துக் கொண்டு போவதல்ல நட்பு; தவறு நடக்கும் போது இடித்துக் காட்டுவதுதான் நட்பு' என்ற வள்ளுவர் வாசகத்தையும் மறக்காமல் செயல்படுகிறது. காஷ்மீர், பஞ்சாப் விவகாரங்கள், விலைவாசி உயர்வு போன்ற பல பிரச்னைகளில் மத்திய அரசையோ, விடுதலைப் புலிகள் விவகாரத்தில் மாநில அரசையோ கடுமையாக விமர்சிக்க (தரக் குறைவாக அல்ல) அது தயங்கவில்லை. இந்த விமர்சனங்களின் கூடவே அது ஆக்கபூர்வமான மாற்று யோசனைகளையும் முன் வைத்திருக்கிறது.

பி. ஜே. பி. யின் யோசனைகள் எல்லாமே நமக்கு உடன்பாடானவை அல்ல. ஆனால் அவை அறிந்து கொள்ளவும் சிந்தித்துப் பார்க்கவும் தகுதி பெற்றவை. பி. ஜே. பி. அரசியல், கவர்ச்சி அரசியல் அல்ல; கருத்து அரசியல்.

சில வாரங்களுக்கு முன் கல்கிக்கு அளித்த பேட்டியில், ''தமிழக இளைஞர்கள் தேசிய நோக்குடன் சுயமாகச் சிந்திக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார் அத்வானி. சிந்திக்க நிறையவே விஷயங்களை பி. ஜே. பி.யின் மூன்று நாள் மாநாடு அளித்திருக்கிறது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# வி ஜி பி

# வழங்கும் இணையில்லா வீட்டு மனைகள்

உடனடியாக வீடு கட்டி குடியேற சகல வசதிகளுடனும் அழகுற அமைக்கப் பட்டிருக்கும் விஜிபி வீட்டு மனைத் திட்டங்களில் உங்களுக்கு ஏற்ற வீட்டு மனையை தேர்ந்தெடுக்க ஒரு அரிய வாய்ப்பு!

ரொக்கம் அல்லது கலபத் தவணைகளில் உங்கள் வசதிக்கேற்ப வீட்டு மனை வாங்கும் திட்டத்தின் மூலம் உடனடியாக ஒரு நல்ல வீட்டு மனையை சொந்தமாக்கிக் கொள்ளுங்கள்



விஜிபி வீட்டு மனைகளின் பத்திரங்கள் சுத்தமானவை. வீடு கட்ட கடன் வாங்குவதற்கு விண்ணப்பிக்க தகுதியானவை. முழுப் பணம் செலுத்தி 10 நாட்களுக்குள் உத்திரவாதத்துடன் பதிவு செய்த நிலப் பத்திரங்கள் உங்கள் கைகளில் ஒப்படைக்கப்படும்.

இலவசமாக நிலத்தை பார்வையிட சிறப்பான ஏற்பாடு செய்து தரப்படும்.

மிக உறுதியாகவும் விரைவாகவும் நீங்கள் விரும்பியவாறு வீடுகள் கட்டித் தரப்படும். வீடு கட்டுவதற்கு 10 ஆண்டுகளில் திருப்பி செலுத்தும் வகையில் கடன் வசதியும் ஏற்பாடு செய்து தரப்படும்.

## வி ஜி பி கோகுல் நகர்

சென்னையிலிருந்து 15 கி.மீ. தொலைவில் ... 5 கி.மீ. தொலைவில் ...

Govt. App. No: LPDM/DDTP/64/73.

## வி ஜி பி கிரீன் லேண்ட்

அரசு அங்கீகார எண்:

செ.க.வ. தி எண்: 83-2/ம.ப. 2

## வி ஜி பி ஸ்ரீராமானுஜர் டவுன்

அரசு அங்கீகார எண்: CR DTCP-M-83-117/L.F. 81 R.O.C. No. 2417/82 CRT(1)

## வி ஜி பி மவுண்ட் மேரி டவுன்

அரசு அங்கீகார எண்:

செ.க.வ. தி எண்: 83-44 ம.ப. 2.



வி ஜி பி ஹவுஸிங் பிரைவேட் லிமிடெட்



மேலும் விவரங்களுக்கு அணுகவும்: விஜிபி சதுக்கம், சைதாப்பேட்டை, சென்னை-600 015.

தொலைபேசி எண்கள்: 457333, 457236, 457372. டெலக்ஸ்: 041-6337 விஜிபி இன்.

... போன்: 564949 ... போன்: 840234.



விஜிபி மக்கள் சேவையில் மகத்தான 35 ஆண்டுகள்.

**மத்யமர் : மற்றொருத்தி**
**வாசகர் விமர்சனம்**



# கதாநாயகிக்கு இட்லி செய்யத் தெரிந்திருக்குமே?

### எதிர்பார்ப்பது என்ன?

00 மனைவியைத் தவிர்த்து, வேறொரு பெண்ணுடன் தொடர்பு கொள்வதற்கு முக்கிய காரணமாகச் சபல புத்தியும், ஆண் என்கிற ஆதிக்க மனப்பான்மையும்தான் என்று கூறும் ஆசிரியர், அதற்குத் தீர்வு பெண்களின் பொருளாதாரச் சுதந்திரமே என்கிறார். இது சரியான முடிவு அல்ல. மணமான எல்லா ஆண்களும், மனைவியிடம் எதிர்பார்ப்பது அன்பும், ஓரளவு பொது அறிவும், தோழமை உணர்ச்சியுடன் கூடிய அறிவாற்றலுமே. அது இல்லாமல், வெறுமனே சமைத்துப் போடுவதற்கு என மனைவியாக வரும் பெண்ணிடம், அவன் மனத்தளவில் அடையும் ஏமாற்றமே அவனுடைய சபல புத்திக்கு முக்கியமான காரணமாக இருக்கிறது.

— டி. பாஸ்கர், நாகப்பட்டிணம்.

### ஜீரணிக்க முடியவில்லை

00 மரகதவல்லியம்மாளின் கூற்று ஜீரணிக்க முடியாதது. தான் வாழ்க்கையில் கணவரிடம் ஏமாந்து விட்டதால் தன் மருமகளும் ஏமாற வேண்டுமா? 'சாரதா, நீ கவலைப்பட வேண்டாம். என் மகனை நான் தட்டிக் கேட்கிறேன்' என்று சொல்ல வேண்டாமா? மருமகளாவது, ''உங்களால் முடியாது என்றால் விட்டு விடுங்கள். நான் அவரைத் திருத்துகிறேனா இல்லையா பாருங்கள்'' என்று வெகுண்டெழ வேண்டாமா?

— எஸ். கிருஷ்ணகுமார், சென்னை — 33.

### நெத்தியடி!

00 ''பாத்ரூம் போகணுமா?'' என்ற 'மனைவியிடம்'' ஆமாம்'' எனத் தலையாட்டிக் கைகூப்பி மனைவியை வணங்குகிறாரே சொக்கலிங்கம், ''இது மாதிரி'' ஆண்களுக்கு சுஜாதா கொடுக்கும் நெத்தியடியாகும். இரு வரிகளில் பெரிய உண்மைகளை அள்ளிக் கொடுத்து விட்டார் சுஜாதா!! கடைசியில் மனைவியிடம் தான் சரணடைய வேண்டுமெனக் கெட்டலையும் ஆண்களுக்கு சுஜாதாவின் சரியான எச்சரிக்கை! திருந்தினால் சரி!!

— மீனாட்சி வைத்தியநாதன், சென்னை — 40.

**ரூ. 50 பரிசு பெறுபவர்:**

**திருமதி எம். வசந்தராதேவி,**
**17, பால்மால் குறுக்குத் தெரு,**
**மதுரை — 1.**

**மற்ற கடிதங்கள் ரூ. 25/- அன்பளிப்புப் பெறுகின்றன.**

### இரண்டுங்கெட்டான் ரகம்

00 ஏழைக் குடும்பத்துப் பெண்ணின் வாழ்வில் மற்றொருத்தி குறுக்கிட்டால் சீறிப் பாய்ந்து, கணவனுடன் சண்டை போடுவாள். தோற்றுப் போனால், தானே கூலி வேலை செய்து தன் வாழ்க்கையின் திசையை மாற்றும் மனோதிடம், அவளுக்கு உண்டு. இதே சம்பவம் ஒரு பணக்காரப்

பெண்ணுக்கு ஏற்பட்டால், கணவனை விவாகரத்து செய்தோ அல்லது ஒதுக்கியோ வைத்து விடுவாள். இக் கதையின் கதா நாயகி சாரதா இரண்டும் கெட்டான் வகையைச் சேர்ந்த மத்யமர் குடும்பத்துப் பெண்ணாச்சே. ஆதரவு கிடைக்காத நிலையிலிருக்கிறாள். சராசரி இந்தியப் பெண்ணுக்குக் கணவனை விட்டால் வேறு புகல் இல்லை. இக் கதையிலிருந்து, 'மத்யமர்' குடும்பத்து மாமியார்கள் திருந்த வேண்டும். பெட்பானை சுமக்கச் சொல்லும் மாமியாரின் மேல் வெறுப்புதான் வருகிறது.

— எம். வசுந்தராதேவி, மதுரை – 1.

### ரத்தமற்றுப் போனபின் ஞானம்!

oo இளமை வேகத்தில் பொய் முகத்தோடு உலவுகிற போலி மனிதர்களை இழுத்து வந்து தோலுரித்துக் காட்டுகிறார் சுஜாதா. அவர்கள் ஆடி, ஓடி, அடங்கி அல்லற்படுவதையும், காலங் கடந்து புத்தி வருவதையும் மாமனார் சொக்கலிங்கத்தின் மூலம் தெளிவாக்குகிற போது "முத்தம் என்றும் மோகம் என்றும் சத்தமிட்டுச் சத்தமிட்டுப் புத்தி கெட்டு போனதொரு காலம்! இன்று ரத்தமற்றுப் போன பின்பு ஞானம்!" என்ற கவியரசு கண்ணதாசனின் பாடல் வரிகளை நம் முன் வரச் செய்து விட்டார் சுஜாதா!

— கவிஞர் சிதெ. கருணாநிதி,
மருதூர் தெற்கு.

### இட்டிலி செய்யத் தெரியாதா?

oo ஒன்றும் தெரியாதவளாகக் காட்டப்படும் அந்த நாயகிக்குக் கண்டிப்பாக 'இட்டிலி' செய்யலாவது தெரிந்திருக்கும். வீட்டை விட்டுப் பிள்ளையுடன் தைரியமாக வெளியே வந்து 'இட்டிலி' வியாபாரம் செய்து தங்கள் வயிற்றைக் கழுவிக் கொண்டிருக்கலாம். அதை விட்டு எதற்கோ அலையும் கணவனுக்காகக் காத்திருக்க வைத்து, தன் மதிப்பைக் குறைத்துக் கொண்டார் சுஜாதா.

— எஸ். காவேரி, மதுரை.

### தீர்ப்புத்தான், நீதியல்ல!

oo 'துரோகம், மனவலி என்பதெல்லாம் மனசைப் பொறுத்தது' –

'தெரியாமலே இருந்திருந்தால்?' – என்பன போன்ற சிந்தனைகள் புலம்பல் சித்தாந்தத்தைத் தவிர்த்த, அறிவுபூர்வமான அணுகுமுறையின் பிரதிபலிப்புகள்.

ஆனால் இந்தப் பெண்ணுக்கு நீங்கள் சொல்லும் தீர்வு 'If you can't cure it endure it' தானா சுஜாதா சார்? நியாயம் வழங்கப்படாத கைதியாய்க் காலம் தள்ளியவள், புதிய தாதிப் பொறுப்பும் ஏற்க வேண்டும் என்பது விதியா?

தீர்ப்புத்தான் வாசிக்கப்பட்டிருக்கிறது! நீதியல்ல!!

— கே. ஜி. ஸ்ரீநிவாசன்,
சென்னை – 78.



# இது வேலை வாய்ப்புக்கு உங்களைப் பற்றிய விவரங்களாக இருக்கலாம்...

தகுதி — குறைந்த பட்சம்
பொருள் ஈட்டும் வாய்ப்பு — மிக மிக அதிகம்
மாத வருமானம் — ரூ. 10,000/-ம் அதற்கு மேலும்

உங்கள் திறமையைப் பயன்படுத்தி, உங்களுக்காகவே ஒரு லாபகரமான வேலை வாய்ப்பை உருவாக்கிக் கொள்ளுங்கள். சிறு சேமிப்பு முகவராக செயல்பட்டு, ஊக்கத் தொகை மற்றும் கமிஷன் மூலம் பெருஞ் செல்வம் பெற்று மகிழுங்கள்.

ரூ. 10,000/- டெபாசிட்டுக்கு,
கமிஷன்/ஊக்கத்தொகையாக ரூ.200/- பெறுங்கள்

| டெபாசிட் சேகரிப்பு | முகவருக்கான ஊக்கத் தொகை/கமிஷன் |
|---|---|
| ரூ. 1,00,000 | ரூ. 2,000 |
| ரூ. 5,00,000 | ரூ. 10,000 |
| ரூ. 10,00,000 | ரூ. 20,000 |

- 1989-90-ல் டெபாசிட் சேகரிப்பு - ரூ. 713 கோடி!
- 1989-90ல் முகவர்களுக்கு வழங்கப்பட்ட ஊக்கத் தொகை - ரூ. 85 லட்சம்!
- நிலையான வேலை வாய்ப்பு, நிலையான வருமானம்.
- கூடுதலான டெபாசிட்டுகளுக்குக் கூடுதலான வருமானம் நிச்சயம்.

## பெரும்செல்வம் பெறுங்கள். சிறு சேமிப்பு முகவராக செயல்படுங்கள்.

DIPR/1763/MS/90/ARES

சென்னை நகரில் விண்ணப்பிக்க:

இயக்குநர், சிறு சேமிப்புத் துறை,
143, அண்ணா சாலை, சென்னை 600 002.
தொலைபேசி: 840223, 846209

மாவட்டங்களில் விண்ணப்பிக்க:

அந்தந்த மாவட்ட ஆட்சியாளர் அலுவலகங்கள்.

# வெற்றிக் கதைகள்

படித்து விட்டு வேலை கிடைக்க வில்லையே என்று வேதனைப்படுவோர் பலர். எல்லாருமே அம்பானியாகவோ, அனந்தராமகிருஷ்ணனாகவோ, விஜய் மல்லையாவாகவோ, பொள்ளாச்சி மகாலிங்கமாகவோ மாறிவிட முடியாது. ஆனால் நம்மைச் சுற்றிப் பார்வையைச் செலுத்தினால் ஒன்று மில்லாத நிலையிலிருந்து ஓரளவு உயர்ந்து தங்களது வளர்ச்சியுடன் நாட்டின் வளர்ச்சிக்கும் உதவியுள்ள பலரைக் காணலாம். தமிழ்நாட்டின் இளைஞர்கள் தன்னம்பிக்கை பெற அத்தகைய சிலரது வெற்றிக் கதைகள் இங்கே இடம் பெறுகின்றன.

# இன்று நான் நெம்பர் ஒன்!

— 'ஷீன்லாக்' அதிபர் ஜான் பீட்டர்

"1960 — ஆம் வருடம். நான் பெயின்ட் விற்பனையில் ஒரு சிறிய ஏஜென்சி எடுத்த போது. பெயின்ட் செய்வதற்கு முன்னால் பயன்படுத்தும் 'தின்னர்' தான் (பெயின்ட் விரைவில் உலர உதவுவதுதான் 'தின்னர்.') விற்பனைக்கு எடுத்துக் கொண்டிருந்தேன். அப்போதெல்லாம் யாருமே அதன் தரத்தில் அக்கறை காட்டாதிருந்தனர். அதனால் மார்க்கெட்டுக்குப் போகும் போது பலரும் புகார் கூறி வந்தார்கள்.

என் தகப்பனார் சொன்னார்: 'எதற்கு இந்த வீண் அலைச்சல் உனக்கு? பேசாமல் என் கடை வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டிரு!' நான் இளைஞன். அப்பா இப்படிச் சொன்ன போது. அதையே ஒரு சவாலாக எடுத்துக் கொண்டேன்.

சில மாதங்களுக்குப் பிறகு. ஏ. சி. காலேஜ் ஆஃப் டெக்னாலஜியில் உள்ள ஒரு பேராசிரியர் எனக்கு நண்பரானார். அவரிடம் நான் தரமான 'தின்னர்' இல்லாததையும், இருப்பதை விற்க முடியாமல் அவஸ்தைப்படுவதையும் எடுத்துச் சொன்னேன்.

'ஏன் நீயே தயாரிப்பில் இறங்கக் கூடாது?' என்று கேட்டார் அந்தப் பேராசிரியர்.

இந்தக் கேள்விதான் என் பிஸினஸ் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை.

மிகக் கடினமான துறைதான். 'பொறுமையோடு செயல்பட்டால் வெற்றி கிடைக்கும்' என்றார் அவர். ஒரு வழிகாட்டி மாதிரி, நான் இது சம்பந்தமாக எந்தெந்தப் புத்தகங்கள் படிக்க வேண்டும் என்று சொன்னார். ஏராளமான புத்தகங்கள்...

சிறு தொழில் இன்ஸ்டிடியூட் வாயிலாக லாபரேடரிகளின் உதவி கிடைத்தது. நானே 'தின்னர்' தயாரிக்கத் தொடங்கினேன். புதிய தயாரிப்பு என்றாலே விற்பனையாளர்கள் முதலில் ஏற்க மாட்டார்கள். விலை வேறு ஒரு பிரச்னை.

யோசித்தேன். உபயோகிப்பாளரையே நேரடியாகப் பார்த்தால் என்ன? பார்த்தேன்.

'லாபம் ஒன்று மட்டுமே நோக்கமாக இருக்கக் கூடாது!'

ஒரு வழியாக என் தயாரிப்புக்கு நிலையான மார்க்கெட் கிடைத்தது. 1970 — இல் அம்பத்தூர் தொழிற்பேட்டையில் ஒரு தொழிற்சாலையையும் அமைத்தேன்.

ஆறே வருடங்களில் மறுபடி ஒரு பிரச்னை முளைத்தது. பொதுவாகவே பிஸினஸ் சற்று மந்தமாக இருக்க, ஜி. டி. நாயுடுவின் 'பிரெஞ்ச் பாலிஷ்' போட்டிக்கு வந்தது. நான் சோர் வடையவில்லை. அதைத் தரத்தில் போட்டியிட்டு, நானும் பிரெஞ்ச் பாலிஷ் தயாரிப்பில் ஈடுபட்டேன்.

ஆனால் வெறுமனே தயாரிப்பு — விற்பனை என்று இருந்தால், உபயோகிப்பாளரின் நேரடித் தொடர்பும் அவர்களுடைய முழு ஆதரவும் கிடைக்காது என்று தோன்றிற்று. எனவே, தச்சுத் தொழிலாளர்கள் அத்தனை பேரையும், மிகப் பெரிய நட்சத்திர ஓட்டலில் விருந்துக்கு அழைத்தேன். அவர்கள் வாழ்நாளில் அப்படி ஓர் ஓட்டலுக்கு அவர்களாகப் போக மாட்டார்கள். அதனால் அவர்களை அங்கே அழைத்து, என் தயாரிப்புக்களின் உயர்வான தரத்தை எடுத்துச் சொல்லி, அவர்களுக்கு விருந்து வைத்து, அவர்கள் தொழிலுக்குப் பயன்படும் சாமான்களடங்கிய ஒரு 'கிட்' கொடுத்து, அதிலேயே பாலிஷ் வகையறாக்களை வைத்து அன்பளிப்பாக ஒவ்வொருவருக்கும் கொடுத்தேன். கூடவே, என் தயாரிப்புக்களைப் பொதுமக்களின் பார்வைக்குக் கொண்டுவர, டீ. வி. விளம்பரம் செய்தேன்.

பிறகு விற்பனையாளர்களை எல்லாம் அழைத்து, அவர்களை நேரில் சந்தித்து, என் தயாரிப்புக்களைப் பற்றி எடுத்துச் சொன்னேன். இந்த மூன்று முயற்சிகளுமே அப்போது புதுமையானவை; அவற்றுக்கு நல்ல பலன் கிடைத்தது.

''ஓரளவு பொருளாதாரச் செழிப்பு வந்த பிறகு, கார் பெயின்ட் தயாரிப்பில் ஈடுபட நினைத்தேன். ஒரு நலிவுற்ற ஆலையை விலைக்கு வாங்கினேன். தேவையான மாற்றங்கள் செய்து, இரண்டு வருடங்கள் பரிசோதன்னை விற்பனை எனப்படும் 'டெஸ்ட் மார்க்கெட்டிங்' செய்தேன். பிறகு ஜூலை 87 இல் விற்பனைக்குக் கொண்டு வந்தேன்.. விற்பனையாளர்களுடன் நான் ஏற்கெனவே ஏற்படுத்திக் கொண்டிருந்த இறுக்கமான தொடர்பு, என் புதிய பொருளின் விற்பனையிலும் எனக்கு உதவியது. அறிமுகப்படுத்திய 72 வண்ணங்களில் சிலவற்றை நான்தான் முதன் முதலாக அறிமுகப்படுத்தினேன்!'' என்கிறார்,

இன்று, ஸ்பினாக்ஸ் கெமிகல் இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டரான ஜான் பீட்டர்.

தமக்கு ஆரம்ப நாளில் உதவிய ஸ்கூட்டரை இன்னும் சென்டிமென்டலாக, வீட்டிலேயே வைத்திருக்கும் பீட்டரின் நிர்வாகத்தின் கீழ் இப்போது ஐந்து கிளை ஆபீசுகள், இயங்குகின்றன. ஒரிசாவில் ஆறாவது கிளை திறக்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

''சிறு வயதிலேயே எனக்கு ஒரு சுபாவம் உண்டு. எதிலும் நான்தான் முதலில் வரவேண்டும் என்று மனசுக்குள் ஒரு பொறி. அது நான் வளர்ந்து பெரியவனாகி, வியாபாரத்தில் இறங்கியதும், நான்தான் இந்தத் துறையில் இந்தியாவிலேயே முதலில் வர வேண்டும் என்ற வைராக்கியத்தை மனத்தில் வளர்த்தது. இந்த முயற்சிகளில் எனக்குச் சில கொள்கைகளும் இருந்தன.

- பிசினஸில் நேர்மையாக இருக்க வேண்டும்.
- லாபம் ஒன்று மட்டுமே பிரதானமான நோக்கமாக



இருக்கக் கூடாது.

- தொடர்ந்து, தரத்தில் உயர்வைக் கடைப்பிடிக்க வேண்டும்.
- தட்டுப்பாடில்லாமல் மார்க்கெட்டில் பொருள் கிடைக்கச் செய்ய வேண்டும்.
- தொழிலில் உண்மையான ஈடுபாடு இருக்க வேண்டும்.
- சொந்தச் சுகங்களுக்கு ஆசைப்படாமல், இடர்களை எல்லாம் மறந்துவிட்டுத் தொழில் செய்ய வேண்டும்.
- அநாவசியச் செலவுகளைக் கட்டுப்படுத்த வேண்டும்.

தொழில் ஆரம்பித்து வளர்ந்த போது என் ஆடிட்டர் சொன்னார்: 'தொழிலில் நீங்கள் உண்மையாக முன்னேற வேண்டுமானால் நம்பர் டூ அக்கவுண்ட் வைத்துக் கொள்ளாதீர்கள்!' இதை நான் 'வார்த்தைக்கு வார்த்தை கடைப்பிடிக்கிறேன். அதனால் மனநிம்மதி கிடைப்பது மட்டுமல்ல, எந்த அதிகாரிக்கும் நான் பயப்பட வேண்டிய நிலைமையும் உருவாகாது அல்லவா?''



# மனதில் உறுதி வேண்டும்!

— 'பி. ஆர். டீ ஸ்டால்ஸ்' பாபு



சகோதரர் ராஜனுடன் பாபு

''மூப்பத்துமூன்றுவருடங்களுக்கு முன், ஒரு ஜூலை மாதக் காலையில் நான் சென்னை வந்து சேர்ந்த போது, என் கையிலிருந்தது ஒரே ஓர் அணாதான்!'' என்கிறார் பி. ஆர். டீ ஸ்டால்களின் அதிபர் பாபு. அப்போது அவர் வயது பதின்மூன்று!

பாபு சிறு வயதில் நிறைய சினிமா பார்ப்பதுண்டு. அதனால் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போதே, சினிமாவில் சேர வேண்டும் என்று ஆசை. சொந்த ஊர் கொட்டாரக்கரையிலிருந்து மதுரைக்கு வந்து ஒரு மாதம் தங்கியிருந்த போது கையிலிருந்த பணம் எல்லாம் செலவாகி விட்டது. மோதிரம் ஒன்று தான் கையிருப்பு. அதையும் விற்றுப் பணமாக வைத்திருந்த போது, ஒருவர் பரிச்சயமானார். சென்னையில் சினிமா உலகில்

தமக்குப் பலரையும் தெரியும் என்று சொல்லி, பணத்தை மெல்ல வாங்கிக் கொண்டு, சென்னையில் ஒரு விலாசத்தைக் கொடுத்து விட்டுத் திண்டுக்கல் போய்விட்டார்!

சென்னையில் வந்து அந்த விலாசத்தில் தேடிய போதுதான் தெரிந்தது — அது பொய்யான முகவரி என்று.

கையில் இருந்ததோ ஒரே அணா. மேற்கொண்டு என்ன செய்வது?

டவுனில், ஓர் ஓட்டலில் சேர்ந்து வேலை செய்ய ஆரம்பித்தார் பாபு.

''1960 இல், திருவல்லிக்கேணியில் ஒரு காய்கறிக் கடை விலைக்கு வந்தது. 'எடுத்து நடத்தேன்?' என்று சொன்னார்கள் நண்பர்கள். துணிந்து எடுத்தேன்.

''அந்தக் காய்கறிக் கடையை நான் நடத்திய போது, பக்கத்தில் ஒரு சிறிய ஓட்டல் இருந்தது. அதைச் சரிவர நடத்த முடியாமல், வாரத்துக்கு ஒரு முதலாளி என்று மாறிக் கொண்டிருந்தார்கள். அந்த ஓட்டலுக்கு நான் கறிகாய் விற்றுக் கொண்டிருந்தேன். அது இன்னொருவருக்கு விற்கப்படவிருக்கும் போது, 'நான் எடுத்து நடத்துகிறேன்' என்று முன் வந்தேன். அது ஒரு பெரிய டீக்கடை அளவிலான ஓட்டல்தான்.

''சிறிய மாற்றங்கள் செய்து, வர்ணம் பூசி ஓட்டலை ஆரம்பித்தேன். நானோ காங்கிரஸ் அபிமானி. அதுவோ தி. மு. க. ஆதரவு அதிகமான இடம்! எனவே, 'நீ எப்படி இங்கே டீக்கடை நடத்திவிடுவாய், பார்த்து விடுகிறோம்' என்று சவால் விட்டார்கள். ரௌடிகளை ஏவிவிட்டுக் கலாட்டா செய்தார்கள். அப்போது நான் இளைஞன். துடிப்பு அதிகம். 'பொறுமையாக இருப்போம்; என்னதான் நடக்கிறது, பார்ப்போம்' என்று கையைக் கட்டிக் கொண்டு இருக்கவில்லை. அத்தனை ரௌடிகளையும் எதிர்த்து நின்று, ஒழித்துக் கட்டினேன்.



''அதுதான் முதல் டீ ஸ்டால். முதலில் மாடர்ன் டீ ஸ்டால் என்றுதான் பெயர் இருந்தது. பிறகு தம்பி ராஜனும் வந்து சேரவே, பாபு — ராஜன் என்ற பெயர்களில், உள்ள முதல் ஆங்கில எழுத்துக்களைச் சேர்த்து 'பி. ஆர். டீ ஸ்டால்' என்று ஆரம்பித்தோம்.

''டீ. வி. வந்த புதிதில், திருவல்லிக்கேணி பெரிய தெருவில், எங்கள் கடையில் முதல் முதலாக டீ. வி. கொண்டு வந்து வைத்த போது கூட்டம் அலைமோதியது. போக்குவரத்துக்கு இடைஞ்சலாக இருக்கும் அளவுக்குத் தெருவில் கூட்டம். போலீஸ் வந்து எங்களை மிரட்டியது! இப்படி, முதல் முதலாக டீ ஸ்டாலில் டீ. வி. கொண்டு வந்தது நான்தான். இது சில செய்தித்தாள்களிலும், பத்திரிகைகளிலும் வந்து ஓரளவு பெயர் பரவியது. வியாபாரம் நன்றாக நடந்தது. படிப்படியாக வளர்ந்தோம். இன்று —

''திருவல்லிக்கேணியில் நான்கு; ராயப்பேட்டையில் இரண்டு; பெரம்பூரில் இரண்டு... என்று எட்டு ஸ்டால்கள் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. ஒன்பதாவதுக்கு வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. தினசரி நானோ, தம்பியோ எல்லா ஸ்டால்களிலும் போய் ஒரு தடவை பார்த்து விடுகிறோம்.''

''உங்கள் வளர்ச்சிக்கு என்ன காரணம் சொல்வீர்கள்?''

''நான் வளர்ந்ததற்கு நாலே நாலு காரணங்கள்தான் சொல்லுவேன். 1. மன உறுதி, 2. நேர்மை, 3. நாம் முன்னேறுவதற்காக மற்றவர்களை அழிக்காமல் இருப்பது, 4. தரமான, ருசியான பொருள்களையே விற்பனை செய்வது!''

இன்று பாபு, டீ ஸ்டால் உரிமையாளர்கள் சங்கத் துணைத் தலைவர்.

# நாணயம் இருந்தால் வளரலாம்!

— 'வைரம்' வடிவேல் செட்டியார்



ஒரு நாள் 'வைரம்' ஐஸ் கம்பெனிக்கு, அதன் முதலாளியைத் தேடி ஒருவர் வந்தார். தங்கள் விழா ஒன்றிற்கு, மறு நாள் கப் ஐஸ்க்ரீம் வாங்க ஆர்டர் கொடுக்க வந்திருந்தார்.

"முதலாளி எங்கே?" என்றார் முன்னால் நின்று கொண்டிருந்தவரிடம்.

"உட்காருங்கள். என்ன வேண்டும்?"

"முதலாளியிடம் பேச வேண்டும். அவரை வரச் சொல்லுங்கள்!"

"நான்தான் முதலாளி. உங்களுக்கு என்ன வேண்டும்?"

வந்தவர் அவரை மேலும் கீழும் பார்த்தார். முதலாளியின் தோற்றம் அவருக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு, முண்டா பனியன் அணிந்திருந்தார். பனியனில், வேட்டியில், உடம்பில் எல்லாம் மிஷினை ரிப்பேர் பார்த்ததால் ஏற்பட்ட மசகுக் கறைகள்.

"தொழிலாளியோடு தொழிலாளியாக ஆரம்பத்தில் உழைக்க வேண்டும். அப்போதுதான் தொழிலாளர் பிரச்னைகள் எழாது. ஒரு தொழில் வளர, இந்தச் செயல் முறை நிச்சயம் கைகொடுக்கும்" என்கிறார் வைரம் அச்சகம் வடிவேல் செட்டியார்.



தேவகோட்டையிலிருந்து 1951 இல் சென்னைக்கு வந்தவர் வடிவேல். முதலில் கரூரிலும், பிறகு தேவகோட்டையிலுமாகப் பள்ளிப் படிப்பை முடித்தவர். பள்ளியிறுதியில் அந்த ஆண்டின் சிறந்த மாணவராக, ராஜா சர் அண்ணாமலை செட்டியார் தங்கப் பதக்கம் பரிசாகப் பெற்றவர். (இவரது பள்ளித் தோழர்கள் தமிழ்வாணனும், 'வானதி' திருநாவுக்கரசும்.)

மனைவியின் ஊரான மதுரையில், முதலில் சிறிய முதலீடு செய்து உழைப்புப் பங்காளியாகக் காப்பித் தூள் கம்பெனி ஒன்றில் சேர்ந்ததுதான் வடிவேல் வைத்த முதல் அடி. 1950 இல் சென்னை வந்தபோது, ஸ்ரீ முருகன் ஐஸ் கம்பெனியை, தம் மைத்துனர் முத்தையாவுடன் சேர்ந்து விலைக்கு வாங்கினார்.

மிகவும் கடினமாக உழைக்க வேண்டியிருந்தது. காலணா,

அரையணா, ஓரணா என்று சில்லறையாக ஐஸ் விற்றுப் பணம் சம்பாதிப்பது எளிதான காரியமல்ல. மிகவும் சிக்கனமாக வாழ்க்கை நடத்த வேண்டியிருந்தது.

1958 இல், 'வைரம் ஐஸ் கம்பெனி' என்று பெயர் மாற்றம் செய்து, குச்சி ஐஸ் மட்டுமின்றி, தரமான கப் ஐஸ் வகைகளையும் தயாரித்தார். இந்தச் சமயத்தில்தான் கவிஞர் குயிலன் தொடர்பு ஏற்பட்டது. புத்தக வெளியீட்டுத் துறை நுணுக்கங்களைப் புரிந்து கொள்ளும் வாய்ப்பு நிறையவே கிடைத்தது.

'வைரம் பதிப்பகம்' 1964 இல் உருவாகியது. பல பிரபல ஆசிரியர்களின் நூல்கள் இங்கிருந்து வெளியிடப்பட்டன. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, பாட நூல்களை வெளியிட்டால்தான் புத்தக வியாபாரத்தைப் பெருக்க முடியும் என்ற முடிவுக்கு வந்தார் வடிவேல். 'குயிலன் — வைரம்' இவற்றின் ஆரம்ப எழுத்துக்களை வைத்து, 'கு வை பப்ளிகேஷன்ஸ்' என்னும் பாட நூல் வெளியீட்டு நிறுவனத்துக்குப் பதிவு செய்து கொண்டார்; ஆனால் 68 இல்தான் அதற்கு அனுமதி கிடைத்தது. இடையே சும்மா இருக்கவில்லை வடிவேல். அரசு அனுமதி தேவை இல்லாத புத்தகங்கள் சிலவற்றை, ஆரம்பப் பள்ளி வகுப்புகளுக்காக வெளியிட்டு ஓர் இடத்தைப் பிடித்தார்!

1970, 71 ஆண்டுகளில், ஏற்கெனவே இத்துறையில் இருந்து வரும் பெரிய விற்பனையாளர்களுடன் போட்டி போடும் நிலைக்கு விற்பனையைப் பெருக்கினார் வடிவேல். உழைப்பில் எப்படிச் சளைக்கவில்லையோ, அப்படியே வியாபார நண்பர்கள், அதிகாரிகள் ஆகியோரின் நட்பைப் பெறுவதிலும் இவர் சளைக்கவில்லை. 'தொழில் வெற்றிக்குச் சுமுகமான நட்பும் அடிப்படை' என்கிறார் வடிவேல்.

72 இல் தமிழக அரசு, பாடநூல் வெளியீட்டுத் தொழிலை முழுமையாக அரசுடைமை ஆக்கியது! கையிலிருந்த நூல்கள் அத்தனையும் எடைக்குப் போட வேண்டி வந்த போதும், வடிவேல் சோர்ந்து போய்விடவில்லை. பிரபல வங்கிகளின் குறிப்பு, பேரேடு, வவுச்சர்கள் முதலிய பல ரக ஸ்டேஷனரிகள் தயாரித்துக் கொடுப்பதற்கும், டெபாசிட் ரசீது போன்ற நம்பிக்கை உத்தரவாதத்துக்குரிய பணிகளும், வந்து சேர்ந்தன. 'வைரம் அச்சகம்' உருவாகியது.

ஜப்பானிலிருந்து 'ரயோபி' என்னும் எண்கள் அச்சிடும் இயந்திரம் வாங்க முற்பட்ட போது, வங்கிக் கடனுடன், தங்கள் பங்குக்கான முதலீட்டைச் செலுத்த வேண்டி வந்தபோது, தைரியமாகக் குடும்ப நகைகளை அடகு வைத்துவிட முடிவு செய்தார்! ஆனால் அதிக விலை கொடுத்து வாங்கிய புதிய அச்சு இயந்திரங்கள், எந்த நோக்கத்துக்காக வாங்கப்பட்டனவோ அதற்குப் பயன்பட முடியாத நிலை ஒரு கட்டத்தில் உருவாகிய போது, சற்று கலங்கினார் வடிவேல்.

இந்தச் சமயத்தில் பாண்டிச்சேரி அரசு தங்கள் பரிசுச் சீட்டுக்களை டெல்லிக்கு அருகில் இருக்கும் ஃபரீதாபாத்தில், காலதாமதத்துக்கு இடையிலும் பெரும் செலவிட்டு அச்சிட்டு வந்தது. டெக்கான் ஏஜென்சீஸ் நண்பர் அன்ராஜ், வைரம் அச்சகத்தின் வசதிகளைப் பாண்டிச்சேரி அரசுக்கு எடுத்துச் சொல்லவே, பரிசுச் சீட்டுக்கள் அச்சிடும் பணி கிடைத்தது.

ஆனால் முதல் ஆறு மாதங்கள் மனைவி, மக்கள், மருமக்கள் என்று மொத்தக் குடும்பமுமே நள்ளிரவு வரை பணிபுரிய வேண்டி வந்தது. இதைப் பார்த்து ராயல் பூட்டான் அரசும் தனது பரிசுச் சீட்டுக்களை வைரம் அச்சகத்திலேயே அச்சிடும்படி கேட்டுக் கொண்டது. இதனால் மேலும் இரண்டு அச்சு



"வேலைக்குப் போவதுதான் வாழ்க்கை என்பது தவறான எண்ணம்..."

இயந்திரங்கள் வாங்க வேண்டிய நிலை ஏற்பட்டது!

வங்கிகளுக்கான ஸ்டேஷனரி வகைகளை அச்சிட காண்ட்ராக்ட் கிடைத்த போது, இவர் கையாண்ட உத்தி விசித்திரமானது, வித்தியாசமானது. ஒரே 'வெரைட்டி'யைத் தேர்ந்தெடுத்து, மில்காரரிடம் 'எனக்கு மொத்தமாக இத்தனை டன் காகிதம் தேவைப்படுகிறது. அதை ஒவ்வொரு கட்டமாக சப்ளை செய்தால் போதும்!' என்று இவர் செய்து கொண்ட ஒப்பந்த முறை, சரக்குக் கையிருப்பு ஏராளமாக வைத்துக் கொண்டு விழிப்பது, ஒட்டு மொத்தமாக முதலீடு செய்வது என்ற இரண்டு அவஸ்தைகளிலிருந்தும் காப்பாற்றி இருக்கின்றன.

இன்றைக்குப் பிள்ளையார் பட்டியில் வைரம் சர்ஜிகல் காட்டன் தொழிற்சாலை இயங்குகிறது. புதிய தொழில். ஆனால் இதிலும் முன்னேற முடியும் என்ற நம்பிக்கை இப்போதே இவரிடம் இருக்கிறது!

பாண்டிச்சேரியில் 'வைரம் சான்வி' என்ற ஃபைபர் கிளாஸ் மின்விசிறித் தொழிற்சாலை தொடங்கியிருக்கிறார். முழுக்க முழுக்க நவீன தொழில் நுட்பம். இதில் மின்சார மிச்சமும் உண்டு என்கிறார் வடிவேல். துருப் பிடிக்காத, ஷாக்—ப்ரூப் பிளேடுகள் பல வண்ணங்களில் இந்த மின்விசிறிகளில் சுழலுகின்றன.

இப்போது கம்ப்யூட்டர் ஸ்டேஷனரி தயாரிப்பிலும் ஈடுபட்டிருக்கிறது வைரம் குரூப். தொழில் நுட்பத்தைப் பெற இத்தாலி இன்ஜினியர்கள் இங்கே வருவதென்றால் லட்சக்கணக்காக ஆகும் என்பதால், தமது தொழிலாளி ஒருவரையே அங்கே அனுப்பி, பயிற்சி பெற்றுவர அனுப்பி வைத்தார்!

வைரம் சோப்புத் தூள், சோப் என்று மார்க்கெட்டிங் பிரிவு ஒன்றும் தொடங்கியிருக்கிறார்!

''எனக்கு டி.வி.எஸ் நிர்வாகத்தைப் பார்த்துத்தான் இன்ஸ்பிரேஷன் உண்டாயிற்று!'' என்கிறார் வைரம் அதிபர் வடிவேல்.

''தொழிலைத் தொழிலாகச் செய்ய வேண்டும். நாணயம் மிக முக்கியம். வேலைக்குப் போவதுதான் வாழ்க்கை என்பது தவறான எண்ணம். உழைப்புக்குப் பயந்து படித்துக் கொண்டே இருப்பது ஆபத்தான மனப்பான்மை. உடலால் உழைக்காத வேலைதான் வேலையா என்ன?'' என்று கேட்கிறார் இந்த வெற்றியாளர்.

பேட்டிகள்: **சாருகேசி**

படங்கள்: **ரமணன்**

---

## ஆன்மிகம்: பாபா சொன்ன பதில்!



''அன்றாட வாழ்க்கையில் ஆன்மிகத்தை எப்படிக் கடைப்பிடிப்பது?'' என்று பாபாவைக் கேட்டபோது சொன்னார்:

''கடமையைச் செய்கிறோம் என்ற கர்வம் எட்டிப் பாராமல் கடமையைச் செய்! அடக்கத்துடன், பொறாமை, சுயநலம், வெறுப்பு போன்ற எதுவும் எட்டிப் பாராமல் பணியாற்று.''

''செய்கிற காரியம் ஒவ்வொன்றும் இறைவனுக்கே அர்ப்பணம் என்ற எண்ணத்துடன் செயல்பட்டால் மனம் தூய்மை அடையும். ஆன்மிகம் என்பது இதுதான்.''

— வி. பாலு.


புதிய
மோத்தி ஸாண்டல் சோப்பு
MOTI
LUXURY BATH SOAP
SANDAL
உங்களுக்காக . . .
உங்கள் மேனி
எழிலுக்காக
மோத்தியில் நிறைந்
திருக்கு-சந்தன குணம்
மோத்தியில் மணக்குது
சந்தனம்... சந்தனம்.
மேனி
எழிலின்
பிரதிபலிப்பு
டாடா தயாரிப்பு
CLARION/B/T/47/203 TML

# நிலா பெண்ணே

போஸ்டாபீஸ் கிளார்க்காய் இருக்கும் கிச்சாவின் தலையில்தான் எத்தனை பொறுப்புக்கள்! விதவைத் தாய், அக்கா, அவளது பிராண்டல் பிள்ளைகள் இரண்டு, கல்யாணத்துக்கு நிற்கும் தங்கை. இவர்களுக்காக நகரத்தில் எங்கோ வாயைக் கட்டி வயிற்றைக் கட்டிச் சம்பாதித்துப் போட்டு, லீவிலே வந்து ஒரு வேளை வாய்க்குணர்த்தியாய் வீட்டுச் சாப்பாடு சாப்பிட உட்கார்ந்தால், சாப்பாடு போட்டுக் கொண்டே தாயார்க்காரி, 'மாமா வந்திருந்தார். நீ முயற்சி பண்ணா ஆபீஸ்லே ஏதேதோ கடன் வாங்கலாமாம். உனக்குத் தங்கச்சிகள் கல்யாணத்தி லே அக்கறை இல்லைன்னு அவர் சொன்னார்,' என்றால் அந்தப் பொறுப்புள்ள பிள்ளைக்கு எப்படிப் பொங்கிக் கொண்டு வரும்?

இந்தக் கட்டத்தை அப்பட்டமான யதார்த்த பாவத்தோடு படம் பண்ணியிருக்கும் விதத்தைப் பார்க்க, 'பா' வரிசை டைரக்டர்களுக்குப் பாய்ச்சல் காட்டுகிற மாதிரி ஓர் இளைய 'த' வரிசை தலைதூக்கியிருக்கிறதே என்று பிரமிக்கத் தோன்றுகிறது.

அலுவலகங்களில் உத்தியோகப் பெண்களுக்கு ஏற்படும் அவஸ்தையை, அவர்களது உள்ளார்ந்த ஏக்கங்களை அத்தனை யதார்த்தமாய்த் தேவி லலிதா வெளியிடும் பாங்கில் நெக்குருகிப் போகிறோம்.

ஜனகராஜுக்குப் புதுமையான காரெக்டர் கொடுக்க டைரக்டர் ஆசைப்பட்டதில் பிசகில்லை. அதைக் கொஞ்சம் ரசிக்கும்படி செய்திருக்கலாமே! தன் வீட்டுக்குள் வெள்ளைப் பன்றிக் குழு ஒன்றைச் சேர்த்து வைத்துக் கொண்டு கொஞ்சி... என்ன



வேடிக்கை பண்ணினாலும் குமட்டல் வருகிறதே தவிர, குறுஞ்சிரிப்புக் கூட எட்டிப் பார்க்கவில்லை!

இடைவேளைக்குப் பிறகு பாதாதிகேசம் கவர்ச்சி காட்டிக் கொண்டு எட்டிப் பார்க்கிறது புதுமுகம் திவ்யா பாரதி. 'ஒண்ணுமறியாத பாப்பா' வேஷம். தயாரிப்பாளரின் தரம் தாழ்ந்து போகக் காரணமாகிறார்.

லொகேஷன், காமெராக் கோணங்கள் தூக்கி நிறுத்தப் பார்க்கின்றன. ஜனகராஜ் அந்த உச்சாணி மலைமுகட்டில் நின்று கொண்டு குரல் கொடுக்க, ஊர்க்காட்டுவாசி மக்கள் நூற்றுக்கணக்கில் அடிவாரத்தில் கூட. மேலே ஜனகராஜ் தோளுக்குப் பின்னே காமெராவை வைத்து அடிவாரத்துக் கும்பலை எறும்பூர்வது போல்—ஆனால் துல்லியமாய்க் காட்டும் அந்தக் காமெராவுக்குத் திருஷ்டி சுற்றிப் போடலாம்.

காட்டுவாசிகளுக்குச் சினிமாப் படம் போட்டுக் காட்ட ஒரு கும்பல் மெனக்கெட்டு வருகிறதே எதற்காக? அப்போது தானே சத்யா (மூவீஸ்) விசுவாசத்துடன் எம். ஜி. ஆர். படம் ஒன்று — நினைத்தேன் வந்தாய்... நூறு வயது... போட்டுக் காட்ட முடியும்?

உருப்படியாய் — உயர்ந்த ரகமாய் — அவார்டு பெறத்தக்க அம்சமாய் ஆரம்பமான அற்புதமான படத்தை இப்படி வசூல் நோக்கத்துக்காகவோ வேறு என்னத்துக்கோ தடம் புரளச் செய்த பாவம் யாரைச் சேரும்?

— பி. எஸ். எஸ்.

# "அம்மா! ஒரு நற்செய்தி!"

## "நான் விரும்பும் ஃபாரெக்ஸ் இப்போது சிக்கனமான விலையில் கிடைக்கிறது!!"

ஊட்டச்சத்துள்ள சுவையான,
பால் சேர்ந்த ஃபாரெக்ஸ்
ஸீரியல் — இப்போது
வசதியான சுகாதாரமான புதிய
ரீஃபில் பேக்கிலே.

ரீஃபில் பேக்கை திறந்ததும்,
அதிலுள்ளவற்றை உடனடியாக
காற்றுப் புகாத டின்னிற்குள்
மாற்றுங்கள்.

200 கிராமிற்கு ரூ. 11/50.




**புதிய ரீஃபில் பேக்**

**ஃபாரெக்ஸ்** : சுவையுடன் வளரும் வழி.

எந்தக் கடையிலும் சிக்கனமான ஒரே விலையில் கிடைக்கிறது.

தேர்ந்தெடுத்த இடங்களில் மட்டுமே கிடைக்கிறது.

Gx/265.90 Tm



# வாழ்க்கையைச் சொல்லித்தரும் குருகுலம்

**மா**யவரம் பக்கத்தில் தலையூர் என்று ஒரு கிராமம். அங்கு நாராயணசாமி அய்யர் என்ற மிராசுதார் இருந்தார். அவருக்குக் காந்தியடிகளிடம் ஏகப்பட்ட ஈடுபாடு. அதனால் தமது வாழ்க்கையை ஹரிஜன முன்னேற்றத்திற்காகவே அர்ப்பணித்துக் கொண்டார். அந்தப் பணியில் தமது நிலத்தையெல்லாம் சிறிது சிறிதாக விற்றுச் செலவழித்துக் கொண்டே வந்தார். கடைசியில் தாம் குடியிருந்த வீட்டையும் ஹரிஜனப் பணிக்காகவே விற்க வேண்டியதாயிற்று!

அவருக்குக் கமலா, சாரதா என்று இரு பெண்கள். தமது இறுதிக் காலம் நெருங்கி விட்டதாக உணர்ந்த அவர், இனி தம்மால் தமது பெண் குழந்தைகளுக்கு வாழ்க்கை அமைத்துத் தர இயலாது என்பதையும் உணர்ந்தார். எனவே, தமது இரண்டு பெண்களையும் வேதாரண்யத்திலுள்ள சர்தார் வேதரத்தினம் பிள்ளையிடம் அழைத்து வந்து, ''இனி இந்தக் குழந்தைகளுக்குத் தாய், தந்தை எல்லாமே நீங்கள்தான்...'' என்று ஒப்படைத்தார். சர்தாரும் அந்தப் பெண் குழந்தைகளைத் தம் குழந்தைகளாகவே ஏற்றுக் கொண்டார்.

**இ**ந்தச் சமயத்தில்தான் காந்தியடிகளின் ஆதாரக் கல்வித் திட்டம் ஆரம்பமானது. அதற்காகச் சில ஆசிரியர்களுக்குப் பயிற்சியளிக்கத் திருச்செங்கோட்டிலுள்ள காந்தி ஆசிரமத்தில் ஏற்பாடுகள் செய்யப் பட்டன. சர்தார் அந்த இரண்டு பெண்களையும் ஆதாரக் கல்வித் திட்டப் பயிற்சி பெறத் திருச்செங்கோட்டிற்கு அனுப்பி வைத்தார்.

பயிற்சியும் முடிந்தது. அப்போது அந்தப் பெண்களிடம், ''இனி நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம்?'' என்று கேட்டார் சர்தார். ''என்னப்பா இப்படிக் கேட்டு விட்டீர்கள்? நீங்களே ஒரு பள்ளி ஆரம்பியுங்களேன். நாங்கள் அதில் ஆசிரியைகளாகப் பணியாற்றுகிறோம்...'' என்று சர்தாருக்குப் பதிலளித்தார்கள் அப் பெண்கள்.

அவ்வளவுதான். ஓர் ஆதாரப் பள்ளியை அமைக்க எல்லா ஏற்பாடுகளையும் துவங்கி விட்டார் சர்தார். 1946 – ஆம் ஆண்டு பிப்ரவரி 7–ஆம் தேதி பள்ளி துவங்கப் பட்டு விட்டது! அந்தப் பள்ளிதான் வேதாரண்யத்திலுள்ள ''கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்.'' இன்று அதன் தலைவர், சர்தார் வேதரத்தினம் பிள்ளையின் புதல்வர் வே. அப்பாக்குட்டி.

''**ஆ**ளுகிற வர்க்கத்துக்கு வெறும் அடிமைகளாக உழைக்கிற குமாஸ்தாக்களை மட்டுமே உருவாக்குகிற கல்வி முறைதான்

மெகாலே கல்வி முறை. தெரிந்தோ தெரியாமலோ இன்னும் நமது அரசாங்கம் அதையேதான் பின்பற்றிக் கொண்டிருக்கிறது. கல்வி என்பது அதுவல்ல; எழுதப் படிக்கத் தெரிந்து கொள்வது மட்டுமல்ல. கல்வி என்பது நடைமுறை வாழ்க்கையில் எதிர்ப்படுகிற பிரச்னைகளுக்குத் தீர்வு காணும் புத்திசாலித்தனத்தையும் மனோபலத்தையும் தருவது. கூடவே வாழ்க்கைக்குத் தேவையான தொழில்களைக் கற்றுக் கொள்வது. சுருக்கமாகச் சொன்னால் காந்தியடிகளின் ஆதாரக் கல்வித் திட்டம் என்பது ஒவ்வொருவரும் சொந்தக் காலில் நிற்பதற்கான ஒரு வழிமுறைதான்...'' என்று குருகுலத்தின் செயல்பாடுகளை விளக்க



* டெலிவிஷன் தயாரிப்பு...



* கம்ப்யூட்டர் வகுப்பு...

ஆரம்பித்தார் வே. அப்பாக்குட்டி.

''நமது தேசத்தின் வளர்ச்சிக்குப் பெண்களின் முன்னேற்றம் மிக மிக முக்கியமானது. அதிலும் கிராமப்புறப் பெண்களின் முன்னேற்றம் அதிமுக்கியமானது. இதைத்தான் காந்தியடிகள் வலியுறுத்தினார். அதைத்தான் குருகுலம் பின்பற்றி வருகிறது.''

''எப்படி?''

''அன்று காந்தியடிகள் தக்களியில் நூல் நூற்கச் சொன்னார். எதற்கு? ஒவ்வொருவரும் ஒரு தொழிலாவது கற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காக. அதற்காக இன்றைய கம்ப்யூட்டர் யுகத்திலும் அதையே செய்ய முடியுமா? அதனால்தான் குருகுலக் குழந்தைகளுக்கு இன்றைய வெளியுலக வாழ்க்கையை எதிர்கொள்ளும் வகையில் கம்ப்யூட்டர் பயிற்சியையும் சிவில் எஞ்ஜினியரிங், சித்த வைத்தியம், எலக்ட்ரானிக்ஸ் போன்ற பயிற்சிகளையும் அளித்து வருகிறோம்.

''வெறும் கல்வியை மட்டும் சொல்லித் தரவில்லை குருகுலம். இந்தப் பகுதியில் நிராதரவான ஏழைப் பெண்களுக்கு அச்சுத் தொழிலில் பயிற்சியளித்து அவர்களைக் கொண்டு ஓர் அச்சுக் கூடம் நடத்தி வரு

* சர்தார் வேதரத்னம் பிள்ளை



* குருகுலச் சிறுமியருடன் அப்பாக்குட்டி



●● நாட்டில் டீ. வி. தயாரிக்கும் கம்பெனிகள் அதிகமாக ஆக அத்தகைய கம்பெனிகள் விற்பனையாளர்களுக்குக் கொடுக்கும் சலுகைகளும் அதிகமாகி உள்ளன! பணமோ, அன்றி உள்நாட்டு, வெளிநாட்டுப் பயணத்திற்கான விமான டிக்கெட்டுகளோ கொடுத்து வந்த கம்பெனிகள், இன்று பம்பாயில் வீட்டு மனைகளும், ஃப்ளாட்டுகளும் கூடக் கொடுக்கின்றன! இந்தப் போட்டியினால் விற்பனையாளர்கள் ரூ. 800 முதல் 2000 வரை விலை குறைத்தும் டீவி விற்கிறார்கள்!

— ராஜீவி நரசிம்மன்

கிறோம். அதே போல் எங்கள் வசதிக்கு ஏற்ற எண்ணிக்கையில் டெலிவிஷன் பெட்டிகளையும் தயாரித்து விற்பனை செய்து வருகிறோம். ''சவேரா'' என்ற பெயருடைய எங்கள் குருகுல கலர் டெலிவிஷனின் விலை எட்டாயிரம் ரூபாய்தான். தயாரிப்பு விற்பனை என்பது ஒருபுறமிருக்க, சுமார் இருபது பெண்களுக்கு அதில் பயிற்சியும் கிடைத்து வருவதுதான் முக்கியம். அது அவர்கள் எதிர்கால வாழ்க்கைக்கு எவ்வளவோ உதவும்.''

''குருகுலம் நடத்துவதற்கு ஏராளமாகச் செலவாகுமே? எப்படி சமாளிக்கிறீர்கள்?''

''நன்கொடைகளைப் பெற்றுக் கொள்கிறோம். இங்கு மொத்தம் 1913 குழந்தைகள் படிக்கிறார்கள். அதில் 800 பேர் விடுதியில் தங்கியிருப்பவர்கள். அவர்களில் நூற்றைம்பது பேர் அனாதைக் குழந்தைகள். ஐம்பது பேர் வசதியில்லாத ஏழைக் குழந்தைகள். அவர்களுக்கு எல்லாவற்றையும் குருகுலம்தான் பார்த்துக் கொள்கிறது. யாராவது தாராள மனமுடையவர்கள், 'இந்த ஆண்டு ஓர் ஏழைக் குழந்தைக்குச் செலவாகும் பணத்தை நன்கொடையாகத் தருகிறேன்' என்று முன்வரும் போது அதைப் பெற்றுக் கொள்கிறோம்.

''மற்றபடி குருகுலத்திற்குச் சொந்தமான நிலங்களிலிருந்து கிடைக்கும் நெல், காய்கறிகள் எல்லாம் மிகவும் உபயோகமாக இருக்கின்றன. பால் தேவைகளுக்குக் குருகுலத்திலேயே ''கோசாலை'' உள்ளது. அந்தப் பசுக்களிலிருந்து கிடைக்கும் பாலைத்தான் உபயோகப்படுத்துகிறோம். ஒரு நாளைக்கு எங்களுக்கு மூன்றரை மூட்டை அரிசி செலவாகிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்...

''இந்தச் செலவுகளில் ஒரு பகுதியையாவது ஈடுகட்டுவதற்காக, ஒருமுறை பொள்ளாச்சி மகாலிங்கம் ஒரு யோசனை கூறினார். அதாவது விசைத்தறிகள் அமைத்துத் துணிகள் நெய்வது. அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் குருகுலச் செலவுகளுக்குப் பயன்படுத்துவது. அதன்படி அவரே முன்வந்து விசைத்தறிகளை அமைத்துத் தந்தார். மொத்தம் இருபது விசைத் தறிகள். நன்றாக இயங்கின. குருகுலம் துணிகளுக்கு வெளியில் ஏக கிராக்கி. அந்தத் தொழிலாளர்களுக்கும் குருகுலம் குறை வைக்கவில்லை. பி. எப். அது இது என்று எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தது. ஆயினும் அவர்கள் குருகுலத்தை லாபம் சம்பாதிக்கிற ஒரு முதலாளியைப் போல் பாவித்துத் தொழிற் சங்கம் தொடங்கிக் கோரிக்கைகளை முன்வைத்து ஸ்டிரைக் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். குருகுலத்தால் சமாளிக்க முடியவில்லை. வேறு வழியின்றி விசைத்தறிப் பிரிவையே மூட வேண்டியதாயிற்று!''

''காந்தியடிகள் சொன்ன ஆதாரக் கல்வியை இன்றையச் சூழலில் குருகுலத்தால் தர முடிகிறதா?''

''அப்படிப்பட்ட ஆசிரியர்களைத் தேடிப் பிடிப்பதே இன்றைய சூழலில் கஷ்டமாக இருக்கிறது. இந்த நிலையில், காந்தியடிகளின் ஆதாரக் கல்வியை முழுமையாக எப்படித் தர முடியும்? இருப்பினும் முடிந்த வரை தருகிறோம். இங்கு படித்துச் செல்லும் பெண்கள் சம்பாதிப்பதுடன் குடும்பத்தையும் நல்லபடியாக நடத்துகிறார்கள் என்பதைச் சம்பந்தப்பட்டவர்கள் வந்து சொல்லும் போது மனத்துக்கு ஆறுதலாக இருக்கிறது.''

குருகுலத்தைச் சுற்றிப் பார்த்தோம். மாணவிகள் ஆசிரியைகளை ''மேடம்'' என்றோ ''மிஸ்'' என்றோ அழைக்கவில்லை. அனைவரையும் ''அக்கா'' என்றுதான் அழைக்கிறார்கள். ஆண்களாக இருந்தால் ''அண்ணா.'' ''தலைமை ஆசிரியை மட்டும் ''பெரியக்கா'' என்று அழைக்கப்படுகிறார். அப்பாக்குட்டியை ''ஐயா ஐயா'' என்று அழைத்துத் தங்கள் வீட்டுத் தாத்தாவிடம் பழகும் அன்னியோன்யத்தோடு பழகுகிறார்கள் குழந்தைகள்.

விடைபெற்றுத் திரும்பும் போது, ''குருகுலத்திற்கான நிதி வசதி ஒரு பிரச்னைதான் என்றாலும் தற்போது அதை விடவும் அவசரமான பிரச்னை ஒன்று உள்ளது...'' என்று நிறுத்தினார் வே. அப்பாக்குட்டி.

''என்ன?'' என்றோம்.

''இங்கு, சிறு குழந்தைகளாக இருக்கும் போதே அனாதைகளாக வந்து சேர்ந்த பெண்களில் மூவர் திருமண வயதுக்கு வந்து விட்டார்கள். வரதட்சணையைக் குறியாகக் கொண்ட இன்றைய இளைஞர்கள் மத்தியில் இந்தப் பெண்களுக்கு நல்ல மாப்பிள்ளைகள் கிடைக்க வேண்டுமே என்பதுதான் எனது இப்போதைய கவலை!'' என்றார் வே. அப்பாக்குட்டி.

**— இளங்கோவன்**

வண்ணப்படங்களும் படங்களும்: **சுபா**

கதை

‘சத்தியசந்தன்’
(அறிமுக எழுத்தாளர்)

டி. ஒய். எக்ஸ் 2457 பென்ஸ் லாரி நாகப்பட்டினத்தில் உள்ள ஒரு புரோக்கர் செட்டில் வெங்காயம் ஏற்றிக் கொண்டு, அந்த மாலை நேரத்தில் சென்னையை நோக்கிக் கிளம்பத் தயாராக இருந்தது. புரோக்கர் செட்டில் குட்டித் தூக்கம் போட்ட டிரைவர் சங்கரன் பிள்ளை ஒரு தகர டப்பாவில் தண்ணீருடன் வெளியே வந்து முகம் கழுவினார். ஐம்பது வயது மதிக்கத்தக்க உருவம். மாநிறம். லேசான முன் வழுக்கை. அதில் ஒன்றிரண்டு நரைமுடி. கூர்மையான கண்கள். லேசான மீசை. கன்னம் சதைப் பற்றுடன் மினுமினுப்புத் தெரிந்தது. இடுப்புச் சதை சரிந்த லேசான தொந்தி. வாடகை தபால், செக் போஸ்ட் பில், ட்ரிப் ஷீட் இவைகளுடன் வண்டியில் ஏறி அமர்ந்தார்.

"என்ன சுப்பிரமணி கூடைகளைச் சரியா எண்ணிக்கிட்டியா?"

"எண்ணிக்கிட்டேண்ணே! பத்து டன்னுக்கு மொத்தம் எண்ணூற்று முப்பது கூடை..."

"ஆயில் லெவல் பார்த்தியா...? சரியா இருக்கா...?"

"சரியா இருக்குண்ணே!"

"ரேடியேட்டருக்குத் தண்ணி ஊத்திட்டியா?"

"ஊத்திட்டேண்ணே!"

'அப்பாடா...! என்று சொல்வது போல் டிரைவர் தன் சட்டையின் மேல் இரண்டு பட்டனைக் கழற்றிக் காலரை பின்னே தூக்கிவிட்டு, என்ஜினை ஸ்டார்ட் செய்தார். வரிசையாக கியர் போட்டு அறுபது கிலோமீட்டர் வேகத்தில் சென்னை சாலையில் செல்லத் துவங்கியது.

இரவுச் சாப்பாடு சிதம்பரத்தில் சாப்பிட்டு, வண்டி எடுக்கும் போது மணி பத்து. புவனகிரியில் இருந்து நெய்வேலி ரோட்டில் திரும்பும் போது, ஒரு கூட்டம் வண்டியை நிறுத்தியது.

"பண்ருட்டி வரைக்கும் இருபது டிக்கெட் வரலாமா?" கூட்டத்தில் ஒருவன் கேட்டான்.

"தலைக்கு அஞ்சி ரூபா தர்றியா?"

"கட்டாது டிரைவரே! வியாபாரத்துக்கு வந்தோம். சரியாப் போகல... மூணு ரூபா தாரோம்..."

"நாலாக் கொடுத்துடுங்க..."

"பரவாயில்ல ஏறுங்கப்பா" என்று ஒருவன் சொல்ல, டிரைவர் சீட்டுக்குப் பின்னாடி உள்ள சீட்டிலும், மற்ற இடங்களிலும் எட்டுப் பேர் உட்கார்ந்து கொள்ள மீதி உள்ளவர்கள் கேபினிலும், வெங்காய கூடு மேலேயும் ஏறிக் கொள்ள வண்டி நகர்ந்தது.

டிரைவரை ஆச்சரியமாகப் பார்ப்பது போல் பார்த்தான் சுப்பிரமணி.

என்ன என்பது போல் சுப்பிரமணியத்தைத் திரும்பிப் பார்த்த டிரைவர், ''ஒவ்வொருத்தர்கிட்டேயும் நாலு ரூபா வாங்கிக்கப்பா...''

''சரிண்ணே!''

வண்டியில் கூட்ட நெரிசலில் சரியாக உட்கார முடியவில்லை. இருந்தாலும், பரவாயில்லை, பண்ருட்டி வரைக்கும்தானே! அப்புறம் ப்ரியாகி விடும். எண்பது ரூபா சர்வ சாதாரணமாகக் கிடைத்து விட்டதே! இதை வைத்துத்தான் முருகேசன் சொன்னானோ, முந்நூறு... நானூறு கிடைக்கும் என்று...!

ஜன்னல் வழியாக வந்த காற்றில் சுப்பிரமணிக்குத் தூக்கம் வருவது போல் இருந்தது. இந்த வாரம்தான் முதன் முதலாக இந்த லாரியில் கிளீனர் வேலைக்குச் சேர்ந்திருந்தான். ஒரு ட்ரிப் மெட்ராஸ் சென்று வந்து இது இரண்டாவது ட்ரிப். பி. ஏ. வரை படிப்பு. படிப்பு முடிந்து நான்கு வருடம் ஆகியும் வேலையில்லை. எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸில் பதிவு பண்ணியும் வேலை நாளுக்கு நாள் கனவாகியது. வீட்டில் வயதான தாய் தந்தை, திருமணத்திற்கு நிற்கும் இரண்டு தங்கைகள். எட்டாம் வகுப்புப் படிக்கும் ஒரு தம்பி... சென்ற வருடம் வரை பக்கத்து கிராமத்தில் உள்ள ஒரு பண்ணையில் கணக்குப் பிள்ளை வேலை பார்த்து வந்தார் அப்பா. வயது ஆக ஆகக் கண் தெரியவில்லை. உடம்பும் முடியவில்லை. அதையும் விட்டு, வீட்டோடு சொந்த வேலையைப் பார்த்துக் கொண்டு தங்கி விட்டார். தற்போது இரண்டு ஏக்கர் நிலத்தை நம்பித் தான் குடும்பம் நடத்த வேண்டும்.

மூன்று வருடங்களுக்கு முன் சுப்பிரமணி கல்லூரியில் படிக்கும் போது வீட்டில் இரண்டு கறவை மாடுகள், ஆடுகள் எல்லாம் வளர்த்து வந்தார்கள். கடைசி நேரப் படிப்புச் செலவிற்காக நிலத்தில் இருந்து வந்த வருமானம் பத்தாததால் ஆடு, மாடு... என்று ஒவ்வொன்றாக விற்றுப் படிப்பை முடித்திருந்தான். இப்போது விவசாயத்தை நம்பி பிரயோஜனம் இல்லை. ஆற்றில் தண்ணீர் இல்லை. மழை இல்லை. குடும்பச் செலவிற்காக மீதம் உள்ள ஆட்டையும், மாட்டையும் வீட்டில் உள்ள பித்தளைச் சாமான்கள், மேஜை, பீரோ என்று ஒவ்வொன்றாக விற்றுக் குடும்பம் நடத்தி வந்தார்கள். 'தின்னு தின்னு உடம்ப வளக்கிறான் ஒரு சல்லிக் காசுக்குப் பிரயோஜனமே இல்லை' என்ற அப்பாவின் கடுமையான வார்த்தை தீயாய்ச் சுட்டது. மாதம் முந்நூறோ! இல்லை நானூறோ சம்பாதிக்க வேண்டும், என்ற வெறி மனசுக்குள் உருவாகியது. டவுன் சென்று ஒவ்வொரு மளிகைக் கடையாய்க் கணக்குப் பிள்ளை வேலைக்காக ஏறி இறங்கினான். பெரிய பெரிய ஓட்டல்களில் ஏறி இறங்கினான். ஒன்றும் காலி இல்லை.

ஒருநாள் நாகப்பட்டினம் கடை வீதியில் வேலைக்காகச் சுற்றும் போது, சுப்பிரமணியனுடன் பத்தாம் வகுப்பு வரை படித்து, பாதியில் நிறுத்தி லாரியில் கிளீனராக வேலை செய்து, இப்போது டிரைவராக இருக்கும் முருகேசனைப் பார்த்துக் கட்டிப் பிடித்துக் கொண்டு நலம் விசாரித்தான், சுப்பிரமணி. வேலைக்காகத் தான் அலைவதாகவும், குடும்பம் ரொம்பவும் கஷ்டமான சூழ்நிலையில் இருக்கிறது என்றும் விவரம் சொன்னான். 'என்னோட தகுதிக்கு உன்னை ஒரு லாரி கிளீனர் வேலைக்குத்தான் சேர்த்து விடலாம்... நீ என்ன சொல்ற? மாதம் பாதி நாள் வேலை, பாதி நாள் ரெஸ்ட். ஒரு டிரிப் ஏறி இறங்கினால் சம்பளத்தைத் தவிர செலவு போக எப்படியும் முந்நூறு. அல்லது நானூறு ரூபாய் கிடைக்கும். இப்படியே இரண்டு வருடம் கிளீனராக ஓடினால் போதும். அப்புறம் டிரைவர் ஆகி விடலாம், அப்ப நிறையச் சம்பாதிக்கலாம். என்ன சொல்ற? சொல்லு' என்றான் முருகேசன்.

சுப்பிரமணிக்கு ஒன்றும் புரியவில்லை. ஆயிரக்கணக்கில் செலவு பண்ணிப் படித்துப் பட்டம் வாங்கியது இந்தக் கிளீனர் வேலைக்குத்தானா? உடம்புக்கு ஒத்து வருமா? அந்தத் தொழில் முறை ஜனங்களிடம் பேச வருமா? குழப்பங்களோடு சிந்தித்தான். எப்படியாவது மாதம் முந்நூறோ, நானூறோ குடும்பத்திற்குக் கொடுக்க வேண்டும். வேறு வழி இல்லை என்று தெரிந்ததும் கிளீனர் வேலைக்கு ஒப்புக் கொண்டான். அடுத்த ஒரு வாரத்தில், தான் தொழில் கற்றுக் கொண்ட டிரைவர் சங்கரன் பிள்ளையிடமே சேர்த்து விட்டான் முருகேசன்.

பண்ருட்டி கடைத் தெருவில் வண்டி நின்றது. டிக்கெட்டுகள் எல்லாம் இறங்கின.

''ஏண்ணே! பலாப்பழம் இருக்கு. திண்டிவனம் வரைக்கும் ஏத்திக்கிறியா...?'' — கீழே பலாப்பழ மூட்டையுடன் இருக்கும் வியாபாரி கேட்டான்.

''எவ்வளவுப்பா....?''

''அம்பது பழம்... பத்துச் சாக்கு மூட்டையில இருக்கு.''

''நூறு ரூபா... தர்றியா...?''

''கட்டாது டிரைவரே? இப்பத்தான் வியாபாரத்துக்குப் போறோம். அம்பது ரூபாய் தாரேன்.''

''கட்டாதுப்பா'' என்று சொன்ன டிரைவர் வண்டியை நகர்த்தினார்.

''அறுபது தர்றேண்ணே!''

''எண்பது தர்றியா?''

''ஏய் தூக்குங்கடா... இதுக்கு மேலே இங்க நிற்கக் கூடாது. நேரம் ஆகுது. இப்பவே சந்தையில போட்டி போட்டுக்

நடிகையின் கணவர்: என்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு உனக்கு எப்படித் தோணிச்சு?

நடிகை: என்னமோ தெரியலைங்க! உங்களைப் பார்த்ததுமே நீங்க டைவர்ஸ் சமயத்துல எதுவும் தகராறு பண்ண மாட்டீங்கன்னு தோணிச்சு, அதான்!

— மேல்மங்கலம் பத்ரா



கிட்டுக் கிடப்பானுக.''

பண்ருட்டி தாண்டி மெட்ராஸ் ரோட்டில் வண்டி திரும்பும் போது, இடது பக்க முன் சக்கரம் ''புஸ்ஸ்ஸ்'' என்ற சப்தத்துடன் மெயின் ரோட்டை விட்டு மணலில் இறங்கியது. டிரைவர் கண்ட்ரோலில் வண்டி குலுங்கி நின்றது. டிரைவர் அவசர அவசரமாகக் கீழே குதித்துப் பார்த்தார். என்ன நடந்திருக்கிறது என்று ஊகிக்க முடியவில்லை. ஒரே இருட்டு!

''ஏய் பொட்டியில காண்டா விளக்கு இருக்கு, எடு...'' என்று டிரைவர் சொல்ல, சுப்பிரமணிக்கு டிரைவர் ''ஏய்'' என்று சொன்ன வார்த்தை அவமானமாக இருந்தது. கோபமாக டிரைவரைப் பார்த்தான். அவர் டயரை பார்த்துக் கொண்டு நின்றார். சீட்டுக்கு அடியில் உள்ள பெட்டியைத் திறந்து காண்டா விளக்கை எடுத்துக் கொளுத்தினான். டயரைப் பார்த்தார்கள். லாடம் ஏறியிருந்தது.

ஜாக்கி வைத்துத் தூக்கி டயரை கழற்றி ஸ்டெப்னியை மாட்ட வேண்டும். சுப்பிரமணி டிரைவர் சொன்னபடி ஜாக்கி, லீவரை எடுத்துக் கொண்டு குனிந்து உள்ளே நுழைந்த போது, தகர பிசிறு ஒன்று சட்டையில் முதுகுப்புறம் கிழித்தது. ''ச்சே'' என்று திரும்ப வெளியே எழுந்து சட்டையைப் பார்த்தான்.

''என்னப்பா நேரம் ஆகுது பாரு. சட்டையெல்லாம் போட்டுக்கிட்டு வேலை செஞ்சாச் சரியா வருமா? படிச்ச பையனை வேலைக்குச் சேர்த்தா இப்படித்தான். அதட்டி வேலை வாங்க முடியலை...'' என்று டிரைவர் எரிந்து விழ, சட்டை பட்டனில் கை வைத்துக் கழற்றப் பொறுமை இல்லாமல் பிய்த்துத் தூக்கி எறிந்தான்.

டயரை கழற்றி வெளியே எடுத்து, ஸ்டெப்னியை இருவரும் சேர்ந்து மாட்டினார்கள். பங்க்சர் ஆன டயரை கேரியரில் மாட்டி விட்டு, ஜாக்கி, லிவர் கட்டை எல்லாவற்றையும் எடுத்து டூல்ஸ் பெட்டிக்குள் வைத்து விட்டு நிமிரும் போது, உடம்பு வேர்வையில் நனைந்து பிசுபிசுத்தது.

''என்னப்பா போகலாமா?'' டிரைவர் கேட்டுக் கொண்டே வண்டியை நகர்த்தினார்.

''இத பாரு சுப்பிரமணி, இது மாதிரி டயர் பங்க்சர் ஆன டயத்துல நீ ரொம்பச் சுறுசுறுப்பா இருக்கணும். மெயின் ரோடு பாரு, அடுத்தடுத்த வண்டிக்காரன் இடிச்சிட்டுப் போயிடுவான். தூங்கக் கூடாது. திண்டிவனத்துல நிப்பாட்டறேன். பழத்தை இறக்கி விட்டு, டீ சாப்பிட்டுட்டுப் போகலாம்'' என்று டிரைவர் ஆறுதல் சொல்வது போல் சொன்னார்.

திண்டிவனம் நாலு ரோட்டைத் தாண்டி வண்டி நின்றது. பழ வியாபாரி பழத்தை இறக்க ஆரம்பித்தார். ''சுப்பிரமணி நாலு டயரையும் தட்டிப் பார்த்துட்டு வா... டீ சாப்பிடலாம்'' என்று சொல்லிக் கொண்டே எதிரில் உள்ள டீக் கடையில் நுழைந்தார் டிரைவர்.

சுப்பிரமணியம் பின்புறம் உள்ள வலது பக்க டயரை இடது கையால் தட்டி விட்டு, இடது பக்க டயரைத் தட்டும் போது முதல் தட்டில் 'சப்' என்று ஏதோ பனியனில் அடித்தது. பசை போல் கொழ கொழவென்று கையில் பிசுபிசுத்தது. என்னவென்று கையை, மூக்கில் வைத்து முகர்ந்த போது, உடம்பைச் சிலிர்த்துக் கொண்டான். மலம்... மனிதமலம்.. டீக்கடைக்காக ரோட்டை விட்டு மணலில் இறக்கியதன் விளைவு! அய்யய்யோ... பேனாப் பிடித்து ஆபீஸ் வேலையில் எழுதிக்கொண்டிருக்க வேண்டிய கை இங்கே... என்ன கொடுமை! யார் செய்த பாவம்? இந்தக் கிளீனர் தொழிலே இப்படித்தானா? நாளையோடு முழுக்குப் போட வேண்டியதுதான். கைப் பம்பைத் தேடிப் போனான். பனியனைக் கழற்றிக் கசக்கி, வண்டியில் காயப் போட்டு விட்டுக் கை, கால், முகம் கழுவி விட்டு டீக் கடையில் நுழைந்தான். டீயை வாயில் வைக்கும் போது மலவாடை நினைவில் வந்து அடிவயிற்றைக் கலக்கியது.

அடுத்த நாள் பொழுது விடியும் போது, லாரி வால்டாக்ஸ் ரோடு — தண்ணீர்த் தொட்டித் தெருவில், ராஜேஸ்வரி லாரி செட் முன் வந்து நின்றது. டிரைவர் தன் கைப் பையுடன் இறங்கிக் கொண்டார். மெட்ராஸ் லோக்கல் டிரைவரிடம் வண்டி ஒப்படைக்கப்பட்டது. ஹார்பரில் வெங்காயம் இறக்க வேண்டும். ஹார்பர் சென்று லோடை இறக்கத் துவங்கினார்கள். லோடு இறக்க ஒரு மணி நேரம் ஆகும். அதற்குள் தூங்கலாம் என்று பார்த்தான் சுப்பிரமணி. தூக்கம் வரவில்லை. இன்றோடு குளித்து

ஐந்து நாட்கள் ஆகின்றன. குளிக்காததால் தலை முடி சிக்கு விழுந்திருந்தது. உடல் உஷ்ணத்தில் கண் பொங்கி, நீர்க் கடுப்பு வருவதற்கான அறிகுறி தெரிந்தது. இடுப்பில் கட்டியிருந்த லுங்கி புழுதி படிந்து ஆயில் கறையுடன் உடம்பில் ஒருவித அரிப்பைக் கொடுத்தது. ஒத்து வராத தொழில்! வேறு ஏதாவது நமக்குத் தகுந்த வேலை பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்.. ஆண்டவன் விட்ட வழி...

**ம**தியம் இரண்டு மணிக்கு வெங்காய லோடு இறக்கிவிட்டு வண்டி திரும்பவும் செட்டிற்கு வந்தது. நாகப்பட்டினத்திற்கு அடுத்த லோடு ஏற்றப்பட்டது. மதிய உணவு கட்டானது. செட்டில் நிம்மதியாகத் தூங்கி எழுந்த டிரைவர், குளித்து சுத்தமான உடையுடன் வண்டியை ஒரு சுற்றுச் சுற்றி டயரைத் தட்டிப் பார்த்துவிட்டு ஏறி அமர்ந்தார். வண்டி புறப்பட்டது.

''அண்ணே!'' என்றான் சுப்பிரமணி.

''என்னப்பா?'' என்று தலையைத் திருப்பிப் பார்த்த டிரைவரிடம், ''நான் இந்தச் சிங்கிளோட இறங்கிக்கறேன். எனக்கு ஒத்து வராத தொழில். உடம்பு முடியல. தூக்கம் தாங்கல. இந்தத் தொழில் முறை ஜனங்களோட பேச வரல. நான் வேற ஏதாவது ஒரு வேலை பார்த்துக்கிறேன். ஆயிரக் கணக்காச் செலவு பண்ணிப் படிச்ச படிப்புக்கு இது மாதிரி கஷ்டப்படணுமான்னு படுது. ஏதோ! முருகேசன் சொன்னான்னு வந்தேன். கஷ்டமான குடும்பம்தான். என்ன பண்றது? நாகப்பட்டினம் போனதும் வேற கிளீனர் பார்த்துக்குங்க.'' என்றான்.

அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த டிரைவர் தனக்குள் சிரித்துக் கொண்டார்.

''அந்த இன்ஸ்பெக்டர் ரொம்ப நேர்மையானவர்னு எப்படிச் சொல்றே?''

''தப்பு செஞ்சது தன்னுடைய பையனாயிருந்தாலும் 'மாமூல்' வாங்கிடுவார்னா பார்த்துக்கோயேன்!''

— காட்டாங்குளத்தூர் குரு.



''என்னப்பா... நீ வந்து நாலு நாள்தான் ஆவுது. அதுக்குள்ள வெறுத்துப் போயிட்டுது உனக்கு? இந்தத் தொழிலைப் பத்தி என்ன தெரிஞ்சுக்கிட்ட...? இந்தத் தொழில் ஒண்ணும் கஷ்டம் இல்லப்பா. நீ படிச்ச படிப்ப நெனைச்சு நெனச்சு இந்தக் கிளீனர் வேலையில முழுமையா ஈடுபட முடியல உனக்கு. இந்த வேலையை நல்லாப் புரிஞ்சு செய். அப்புறம் சுலபமா ஆயிடும். எந்தத் தொழிலும் புரிஞ்சுக்கிற வரைக்கும்தான் கஷ்டம். ஆரம்பத்தில உம்முன்னு இருக்கிற நீ, பழகப் பழக கலகலப்பா ஆயிடுவே. நாலு வண்டி கிளீனர்கிட்ட பழகறப்ப 'மச்சான்... மாப்பிள்ளே!'ன்னு முறை வச்சுப் பழகு. அப்பதான் ஒவ்வொருத்தரும் தொழில்ல நல்லது கெட்டது சொல்றப்ப உனக்கு நல்லாப் புரியும். நமக்கு இதுதான் தொழில், நமது வாழ்க்கை இதில்தான் அடங்கியிருக்குன்னு நெனைச்சுச் செயல்பட்டின்னா, பொறுப்பு வந்துடும். அப்புறம் சுலபமாயிடும். தொழில் முறையில டிரைவர்ங்க திட்டறதுதான். அத மனசுல வச்சுக்கப்படாது. எல்லாம் உன் நல்லதுக்குத்தான். இப்படியே இரண்டு வருஷம் கடுமையா உழைச்சின்னா டிரைவர் ஆகிடலாம். இதுல உனக்குப் படிக் காசு எல்லாம் சேர்த்துச் சம்பளத்தைத் தவிர ஒரு டூட்டிக்கு நானூறு ரூபாய் கிடைக்கும். உனக்கு வருமானமும் கிடைக்குது; தொழிலும் கத்துக்கிறே... டிரைவர் ஆகிட்டின்னா நிறையச் சம்பாதிக்கலாம். நீ விருப்பப்பட்டா லாரி ஓட்டலாம். இல்ல ஏதாவது ஒரு கார்ப்பரேசன் பஸ் ஓட்டப் போயிடலாம். நீ படிச்ச படிப்புக்குப் பத்தாயிரம், இருபதாயிரம் லஞ்சம் கொடுத்தாத்தான் வேலைக்குப் போகலாம். ஆனா இந்த வேலைக்கு நீ எந்த லாரி முதலாளிக்கும் லஞ்சம் கொடுக்க வேண்டியதில்லை. இந்த உலகத்துல லஞ்சம் வாங்காத ஒரு வேலைன்னா இந்த லாரி டிரைவர், கிளீனர் வேலைதான். நமது திறமைதான் லஞ்சம். நீ படிச்ச படிப்பை நெனைச்சு முழுமையா ஈடுபட முடியாம தடுமாறிக்கிட்டு இருக்கே... நான் சொன்னதை நல்லாச் சிந்திச்சுப் பாரு.... வண்டி போய் நாகப்பட்டிணம் சேர இன்னும் எட்டு மணி நேரம் ஆகும்.''

**அ**டுத்த நாள் பொழுது விடிய, காரைக்கால் தாண்டி திருமலைராஜன் பட்டினத்தில் தேவர் டீக் கடையில் வண்டியை நிறுத்தினார் டிரைவர். சுப்பிரமணியை டீ குடிக்க எழுப்பி விட்டுவிட்டுக் கடைக்குள் நுழைந்தார் டிரைவர். தூக்கத்தில் இருந்து எழுந்த சுப்பிரமணி சுற்றும் முற்றும் பார்த்து 'விடிந்து விட்டதே!' என்ற பரபரப்புடன் இறங்கி ஒவ்வொரு டயராகத் தட்டிக் கொண்டு வந்தான். 'டும்.... டும்..' என்று தட்டும் சப்தத்தில் காற்றின் அழுத்தம் முழுமையாகப் புரிய ஆரம்பித்தது.

அமரர் **கல்கி**

# சிவகாமியின் சபதம்



முதல் பாகம்

## பரஞ்சோதி யாத்திரை

# பிரயாணிகள்


ளவேனிற் காலத்தில் ஒரு நாள் மாலை, மகேந்திர தடாகத்தின் கரை வழியாகச் சென்ற இராஜபாட்டையில், பிரயாணிகள் இருவர் காஞ்சிமா நகரை நோக்கி நடந்து கொண்டிருந்தனர்.

அவர்களில் ஒருவர் ஆறடி உயரத்துக்கு மேல் வளர்ந்திருந்த ஆஜானுபாகு; காவி வஸ்திரம் தரித்த பௌத்த சந்நியாசி. கடுமையான தவ விரத அனுஷ்டானங்களினாலோ, வேறு கடினமான காரியங்களில் ஈடுபட்டதனாலோ, அந்தப் புத்த பிக்ஷுவின் தேகமானது வறண்டு கெட்டிப் பட்டுக் கடினமாகியிருந்தது. அவருடைய முகத் தோற்றமானது அன்பையோ, பக்தியையோ உண்டாக்குவதாயில்லை; ஒருவித அச்சத்தை ஊட்டுவதாயிருந்தது.

இன்னொரு பிரயாணி கட்டமைந்த தேகமும், களை பொருந்திய முகமும் உடைய பதினெட்டுப் பிராயத்து இளம் பிள்ளை.

பிரயாணிகள் இருவரும் வெகுதூரம் வழி நடந்து களைப்புற்றவர்களாகக் காணப்பட்டார்கள்.

"தலைநகரம் இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது?" என்று வாலிபன் கேட்டான்.

"அதோ!" என்று சந்நியாசி சுட்டிக் காட்டிய திக்கில், அடர்ந்த மரங்களுக்கு இடை இடையே மாட மாளிகைகளின் விமானங்கள் காணப்பட்டன. இளம் பிரயாணி சற்று நேரம் அந்தக் காட்சியை உற்று நோக்கிக் கொண்டிருந்தான். பின்னர், புத்த பிக்ஷுவைப் பார்த்து, "இங்கிருந்து ஒரு நாழிகை தூரம் இருக்குமா?" என்று கேட்டான்.

"அவ்வளவுதான் இருக்கும்."

"அப்படியானால், நான் சற்று உட்கார்ந்து விட்டு வருகிறேன். அவசரமானால் தாங்கள் முன்னால் போகலாம்!" என்று சொல்லி, வாலிபன் கையிலிருந்த மூட்டையையும் தடியையும் பாதை ஓரமாகக் கீழே வைத்து விட்டு, ஏரியைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்தான்.

சந்நியாசியும் அவன் அருகில் மேற்குத் திசையைப் பார்த்துக் கொண்டு அமர்ந்தார்.


ல் வானத்தின் அடிப்புறத்தில் தங்க நிறமான ஞாயிறு திருமாலின் சக்ராயுதத்தைப் போல் 'தகதக'வென்று சுழன்று கொண்டிருந்தது. அதன் செங் கிரணங்களினால் மேல் வானமெல்லாம் செக்கர் படர்ந்து, பயங்கரமான போரில் இரத்த வெள்ளம் ஓடிய யுத்த களத்தைப் போல் காட்சியளித்தது. ஆங்காங்கே காணப்பட்ட சிறு மேகக் கூட்டங்கள் தீப்பிடித்து எரிவது போல் தோன்றின.

சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந்த திசையில், மகேந்திர தடாகத்தின் பளிங்கு போலத் தெளிந்த நீர், உருக்கிய பொன்னைப் போல் ஒளிர்ந்து கொண்டிருந்தது.

ஆனால், மேற்குத் திசையிலிருந்து சற்றுத் திரும்பி அந்த விசாலமான ஏரியின் வட கரையை நோக்கினால் முற்றும் மாறான வேறொரு காட்சி காணப்பட்டது. அந்தக் கரையில் ஏரிக்குக் காவலாக நின்ற சிறு குன்றுகளின் மாலை நேரத்து நெடியநிழல் ஏரியின் மேல் விஸ்தாரமாகப் படர்ந்திருந்தபடியால் ஏரி நீர் அங்கே கருநீலம் பெற்று விளங்கிற்று.

நிழல் படர்ந்த ஏரிக்கரை ஓரமாகச் சில இடங்களில் கண்ணைப் பறிக்கும் வெள்ளை நிறம் ஒட்டுத் திட்டாகத் திகழ்ந்தது. சிறிது கூர்ந்து கவனித்தால் அந்த இடங்களில் வெண் நாரைகள் ஒற்றைக் காலில் நின்று தவம் புரிகின்றன என்பதை அறிந்து கொள்ளலாம். சில சமயம் திடீரென்று ஒரு வெண் நாரைக் கூட்டமானது ஜலக் கரையிலிருந்து கிளம்பி ஆகாசத்தில் மிதக்கத் தொடங்கும். ஆகா! அந்தக் காட்சியின் அழகை என்னவென்று சொல்வது? கீழே கரு நிறத் தண்ணீர்ப் பரப்பு; மேலே கருநீல வானம்; பின்னால் கரும் பசுமை நிறக் குன்றுகள். இவற்றின் மத்தியில் அந்தத் தாவன்யமான நாரைக் கூட்டம் வானவெளியில் மிதந்து செல்வது போல் நெருக்கமாய்ப் பறந்து செல்லும் காட்சி யாருக்குமே மனக் கிளர்ச்சியை உண்டாக்கும். இறைவனுடைய லீலா விபூதிகளில் சிந்தை செலுத்தியவர்களோ மெய்ம் மறந்து பரவசமாகி விடுவார்கள்.

இவற்றையெல்லாம் சற்று நேரம் மௌனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்த வாலிபன், தனக்குத் தானே பேசிக் கொள்வது போல், "இந்தப் பிரம்மாண்டமான ஏரியை மகேந்திர தடாகம் என்று சொல்வது பொருத்தமில்லை; மகேந்திர சமுத்திரம் என்றுதான் இதைச் சொல்ல வேண்டும்!" என்றான்.

சந்நியாசி ஏரியை நோக்கியவண்ணம், "இந்த மகேந்திர தடாகத்தில் இப்போது தண்ணீர் குறைந்து போயிருக்கிறது. ஐப்பசிக் கார்த்திகையில் மழை பெய்து ஏரி நிரம்பியிருக்கும் போது பார்த்தாயானால்,

பிரமித்துப் போவாய்! அப்போது நிஜ சமுத்திரம் போலவே இருக்கும்!'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தார்.

''புறப்பட்டு விட்டீர்களா, சுவாமி?'' என்றான் வாலிபன்.

''ஆமாம், பரஞ்சோதி! என்னோடு வருவதற்குத்தான் உனக்குப் பிடிக்கவில்லை போலிருக்கிறதே!'' என்று சந்நியாசி கூறி விட்டு நடக்கத் தொடங்கினார்.

பரஞ்சோதி என்ற அவ் வாலிபனும் மூட்டையையும் தடியையும் எடுத்துக் கொண்டு அவரைத் தொடர்ந்து நடக்கலானான்.

சாலையில் போவோர் வருவோர் கூட்டம் அதிகமாயிருந்தது. பிரயாணிகள் ஏறிய வண்டிகளும், நெல்லும் வைக்கோலும் ஏற்றிய வண்டிகளும் சாரி சாரியாய்ப் போய்க் கொண்டிருந்தன.

சாலைக்கு அப்புறத்தில் முதிர்ந்த கதிர்களையுடைய செந்நெல் வயல்கள் பரந்திருந்தன. கதிர்களின் பாரத்தினால் பயிர்கள் தலைசாய்ந்து விழுந்து கிடந்தன. ஆங்காங்கே சில வயல்களில் குடியானவர்கள் அறுவடையான கற்றைகளைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். வயல்களிலிருந்து புது நெல், புது வைக்கோலின் நறுமணம் 'கம்' மென்று வந்து கொண்டிருந்தது.

சற்றுத் தூரம் போனதும் ஓர் அழகிய கிராமம் தென்பட்டது.

அந்தக் கிராமத்தைத் தாண்டியதும் புது நெல் மணத்துக்குப் பதிலாக மல்லிகை முல்லை மலர்களின் நறுமணம் சூழ்ந்தது. அந்த மணத்தை மூக்கினால் நுகர்வது மட்டுமின்றித் தேக முழுவதனாலும் ஸ்பரிசித்து அனுபவிக்கலாம் என்று தோன்றியது.

''ஆகா!'' என்றான் வாலிபன்.

அவனுக்கெதிரே கண்ணுக் கெட்டிய தூரம் நந்தவனங்கள். மல்லிகை முல்லைப் புதர்களின் மீது வானத்து நட்சத்திரங்கள் வந்து படிந்தது போல் குண்டு மல்லிகைகளும் முத்து முல்லைகளும் 'கலீ'ரென்று பூத்துச் சிரித்துக் கொண்டிருந்தன.

இந்த வெண்மலர்ப் பரப்புக்கு இடை இடையே தங்க நிறச் செவ்வந்திப் பூக்களின் காடும் காணப்பட்டது.

''இவ்வளவு பூவையும் என்னதான் செய்வார்கள்?'' என்று வாலிபன் கேட்டான்.

''இவற்றில் பாதி கோவில் தெய்வங்களுக்கு அர்ப்பணமாகும், மற்றப் பாதி காஞ்சி நகரத்துப் பெண் தெய்வங்களின் கூந்தலை அலங்கரிக்கும்..... அதோ!'' என்று சட்டென நின்றார் சந்நியாசி.

சர சரவென்று சாலையின் குறுக்கே ஒரு பாம்பு ஊர்ந்து சென்று நந்தவனத்துக்குள் புகுந்து மறைந்தது.

''இந்த மல்லிகை மணத்துக்குப் பாம்புகள் எங்கேயென்று காத்திருக்கும்!'' என்றார் சந்நியாசி.

பாம்பு மறைந்ததும் இருவரும் மேலே சென்றார்கள். சற்று நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது.

பரஞ்சோதி 'களுக்' கென்று சிரித்தான்.

''எதை நினைத்துச் சிரிக்கிறாய்?'' என்றார் சந்நியாசி.

பரஞ்சோதி சற்று நேரம் பேசாமல் இருந்து விட்டு, ''இல்லை, அடிகளே! மத்தியானம் அந்தச் சர்ப்பத்தைக் கொன்று என்னைக் காப்பாற்றினீர்களே? நீங்கள் புத்த பிக்ஷுவாயிற்றே? ஜீவஹத்தி செய்யலாமா என்று நினைத்துச் சிரித்தேன்!'' என்றான்.

''தன்னைக் கொல்ல வந்த பசுவையும் கொல்லலாம் அல்லவா?'' என்றார் புத்த பிக்ஷு.

''ஆனால், பாம்பு தங்களைக் கொல்ல வரவில்லையே? என்னைத்தானே கொல்ல வந்தது?'' என்றான் பரஞ்சோதி ஏளனக் குரலில்.

''என் சிஷ்யனை நான் காப்பாற்ற வேண்டாமா!'' என்றார் பிக்ஷு.

''சிஷ்யனா? யாரைச் சொன்னீர்கள்?''

''ஆமாம், நீ என் உயிரை ஒரு சமயம் காப்பாற்றினாய்; அதற்குப் பிரதியாக....''

''தங்கள் உயிரை நான் காப்பாற்றினேனா! எப்போது?''

''முந்நூறு வருஷங்களுக்கு முன்னால்....''

''என்ன!''

''முன்னொரு ஜன்மத்தில்.''

''ஓஹோ! தாங்கள் முக்காலமும் உணர்ந்த முனிவர் என்பது தெரியாமல் கேட்டு விட்டேன்; க்ஷமிக்க வேண்டும்.''

சந்நியாசி மௌனமாக நடந்தார்.

மறுபடி பரஞ்சோதி, ''சுவாமி! இனிமேல் வரப் போகிறது கூடத் தங்கள் ஞான திருஷ்டியில் தெரியுமல்லவா?'' என்று கேட்டான்.

''வரப் போகிறது ஒன்றைச் சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள்.''

''இந்த நாட்டுக்குப் பெரிய யுத்தம் வரப் போகிறது!''

''பெரிய யுத்தமா?''

''ஆமாம்; மகா பயங்கரமான யுத்தம். பாலாறு இரத்த ஆறாக ஓடப் போகிறது. மகேந்திர தடாகம் இரத்தத் தடாகம் ஆகப் போகிறது.''

''ஐயோ! பயமாயிருக்கிறதே! போதும்

அடிகளே!''

சற்றுப் பொறுத்து மறுபடியும் பரஞ்சோதி, ''நாட்டின் சமாசாரம் எனக்கெதற்கு, சுவாமி? என் விஷயமாக ஏதாவது தெரிந்தால் சொல்லுங்கள்!'' என்றான்.

''இன்று ராத்திரி உனக்கு ஒரு கஷ்டம் ஏற்படப் போகிறது.''

''சிவ சிவா! நல்ல வாக்காக ஏதாவது சொல்லக் கூடாதா?''

''புத்த பகவானுடைய அருளால் அந்தக் கஷ்டம் நீங்கும்.''

''நான் சைவன் ஆயிற்றே! புத்தர் எனக்கு அருள் செய்வாரா?''

''புத்தருடைய கருணை எல்லையற்றது.''

''அதோ வருவது யார்?'' என்று கேட்டான் பரஞ்சோதி.

மங்கிய மாலை வெளிச்சத்தில், ஓர் அபூர்வ உருவம் அவர்களுக்கெதிரே வந்து கொண்டிருந்தது தெரிந்தது.

''பார்த்தாலே தெரியவில்லையா? திகம்பர சமண முனிவர் வருகிறார்!'' என்றார் புத்த பிக்ஷு.

''சமண முனிவர்கள் இன்னும் இங்கே இருக்கிறார்களா?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''முக்கால்வாசிப்பேர் பாண்டிய நாட்டுக்குப் போய்விட்டார்கள். மற்றவர்களும் சீக்கிரம் போய்விடுவார்கள்.''

சமண முனிவர் அருகில் வந்தார். அவர் புத்த பிக்ஷுவைப் போல் உயர்ந்து வளர்ந்தவர் அல்ல. கட்டையாயும் குட்டையாயும் இருந்தார். கௌபீனம் ஒன்றுதான் அவருடைய ஆடை. ஒரு கையில் உறி கட்டித் தூக்கிய கமண்டலம் வைத்திருந்தார். இன்னொரு கையில் மயில் தோகை விசிறி; கக்கத்தில் சுருட்டிய சிறு பாய்.

அவர் அருகில் வந்ததும் புத்த பிக்ஷு, ''புத்தம் சரணம் கச்சாமி!'' என்றார். சமண முனிவர், ''அருகர் தாள் போற்றி!'' என்றார்.

''இருட்டுகிற சமயத்தில் அடிகள் எங்கே பிரயாணமோ?'' என்று புத்த சந்நியாசி கேட்டார்.

அதற்குச் சமணர், ''ஆகா! இந்த ருத்ர பூமியில் எனக்கு என்ன வேலை? தொண்டை மண்டலந்தான் சடையன் கூத்தாடும் சுடுகாடாகி விட்டதே, தெரியாதா? நான் பாண்டிய நாட்டுக்குப் போகிறேன்'' என்றார்.



''இன்றைக்கு முக்கியமாக ஏதாவது விசேஷம் உண்டோ?'' என்று புத்த பிக்ஷு கேட்க, சமண முனிவர், ''உண்டு; விசேஷம் உண்டு. கோட்டைக் கதவுகளை அடைக்கப் போகிறார்களாம்!'' என்று சொல்லிக் கொண்டே மேலே விரைந்து சென்றார்.

''ஒரு காலத்தில் இந்தப் பல்லவ ராஜ்யத்தில் சமணர்கள் வைத்ததே சட்டமாயிருந்தது. அவர்கள் கிழித்தகோடு தாண்டாமல் மகேந்திர சக்கரவர்த்தி நடந்து வந்தார். இப்போது....'' என்று கூறிப் புத்த பிக்ஷு நிறுத்தினார்.

''இப்போது என்ன?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''இப்போது சைவ வைஷ்ணவர்களின் பாடு இந்த நாட்டில் கொண்டாட்டமாயிருக்கிறது.''

''ஓஹோ!'' என்றான் பரஞ்சோதி. பிறகு, ''ஏதோ கோட்டைக் கதவு சாத்துவதைப் பற்றிச் சமண முனிவர் சொன்னாரே, அது என்ன?'' என்று கேட்டான்.

''அதோ பார்!'' என்றார் சந்நியாசி.

சாலையில் அந்தச் சமயத்தில் ஒரு முடுக்குத் திரும்பினார்கள். எதிரே காஞ்சிமா நகரின் தெற்குக் கோட்டை வாசல் தெரிந்தது. கோட்டை வாசலின் பிரம்மாண்டமான கதவுகள் மூடியிருந்தன.

## இரண்டாம் அத்தியாயம்

# தலைநகரம்

கோட்டை மதிலைச் சேர்ந்தாற்போல் பெரிய அகழி இருந்தது. அதன் அகலம் சுமார் நூறு அடி இருக்கும். குனிந்து பார்த்தால் 'கிடுகிடு' பள்ளமாயிருந்தது. அடியில் இருண்ட நிறமுள்ள ஜலம் காணப்பட்டது.

நமது பிரயாணிகள் வந்த இராஜ பாதையானது அகழியின் அருகில் வந்ததும் இரண்டாகப் பிரிந்து ஒன்று வலப் புறமாகவும் ஒன்று இடப் புறமாகவும் கோட்டை மதிலைச் சுற்றி அகழிக் கரையோடு சென்றது. சாலையோடு வந்த வண்டிகளும், மனிதர்களும் இடப்புறமாகவோ வலப்புறமாகவோ மதிலைச் சுற்றிக் கொண்டு போனார்கள்.

அகழியின் மேல் ஒரு குறுகலான மரப் பாலம் காணப்பட்டது. அது கோட்டை வாசல் வரை சென்றது.

புத்த பிக்ஷு பரஞ்சோதிக்குச் சைகை காட்டிவிட்டு அந்தப் பாலத்தின்மேல் நடந்து சென்றார். பரஞ்சோதியும் அவரைப் பின் தொடர்ந்தான்.

''இதென்ன, இவ்வளவு சின்னப் பாலமாயிருக்கிறதே? கோட்டைக்குள் வண்டிகளும் வாகனங்களும் எப்படிப் போகும்?'' என்று கேட்டான் பரஞ்சோதி.

''இந்த வாசல் வழியாகப் போக முடியாது. வடக்கு வாசலிலும் கிழக்கு வாசலிலும் பெரிய பாலங்கள் இருக்கின்றன. அவற்றில் யானைகள் கூடப் போகலாம்!'' என்றார் சந்நியாசி.

பாலத்தைத் தாண்டிக் கோட்டை வாசலருகில் அவர்கள் வந்தார்கள். அங்கே ஒரு சேமக்கலம் கட்டித் தொங்கிற்று. பக்கத்தில் ஒரு கட்டையும் கிடந்தது. கட்டையை எடுத்துச் சேமக்கலத்தில் ஒரு தட்டுத் தட்டினார் சந்நியாசி.

மேலேயிருந்து, ''யார் அங்கே?'' என்று குரல் கேட்டது. கோட்டை வாசலின் மேல் மாடத்திலிருந்து ஒருவன் எட்டிப் பார்த்தான். இருட்டிவிட்டபடியால் அவன் முகம் தெரியவில்லை.

''மருதப்பா! நான்தான்!'' என்று சாமியார் சொல்லவும், மேலேயிருந்து எட்டிப் பார்த்தவன், ''தாங்களா? இதோ வந்து விட்டேன், அடிகளே'' என்று கூறிவிட்டு மறைந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் கோட்டைக் கதவின் தாள் திறக்கும் சத்தம் கேட்டது. கதவில் ஒரு மனிதர் உள்ளே புகக் கூடிய அளவு துவாரம் தோன்றியது.

புத்த சந்நியாசி அந்தத் துவாரத்திற்குள் புகுந்து சென்று பரஞ்சோதியையும் கையைப் பிடித்து உள்ளே அழைத்துக் கொண்டார். மறுபடி கதவின் துவாரம் அடைக்கப்பட்டது.

பரஞ்சோதி உள்ளே போனதும் நகரின் பக்கம் பார்வையைச் செலுத்தினான். எங்கே பார்த்தாலும் பிரகாசமான தீபங்களால் நகரம் ஒளி மயமாகக் காணப்பட்டது. ஆயிரக்கணக்கான மனிதர்கள் பேசுவதிலிருந்து உண்டாகும் 'கல்' என்ற ஓசை எழுந்தது.

பரஞ்சோதி இதுவரையில் அவ்வளவு பெரிய நகரத்தைப் பார்த்தது கிடையாது.

எனவே, பார்த்தது பார்த்தபடி பிரமித்து நின்றான்.

புத்த சந்நியாசி கதவைத் திறந்த காவலனைப் பார்த்து, "மருதப்பா! நகரில் ஏன் கலகலப்புக் குறைவாயிருக்கிறது? கோட்டைக் கதவு இதற்குள் ஏன் சாத்தப்பட்டது? ஏதாவது விசேஷம் உண்டா?" என்று கேட்டார்.

"நன்றாகத் தெரியவில்லை சுவாமி! இன்று காலையிலிருந்து நகரம் ஒரே கோலாகலமாய்த்தானிருந்தது...." என்பதற்குள் பிக்ஷு குறுக்கிட்டார்.

"கோலாகலத்துக்குக் காரணம்?" என்று கேட்டார்.

"தங்களுக்குத் தெரியாதா? சிவகாமி அம்மையின் நடனம் இன்றைக்குச் சக்கரவர்த்தியின் சபையில் அரங்கேறுவதாக இருந்தது. அதனால்தான் ஜனங்களுக்கு அவ்வளவு கொண்டாட்டம்!"

"எந்தச் சிவகாமி அம்மை?" என்று சந்நியாசி கேட்டார்.

"வேறு யார்? ஆயனரின் மகள் சிவகாமிதான்.....!"

இதுவரை பேச்சைக் கவனியாதிருந்த பரஞ்சோதி சட்டென்று திரும்பி, "யார், ஆயனச் சிற்பியாரா?" என்று கேட்டான்.

"ஆமாம்!" என்று காவலன் கூறிப் பரஞ்சோதியை உற்று நோக்கிவிட்டு, "அடிகளே! இந்தப் பிள்ளை யார்?" என்று பிக்ஷுவைப் பார்த்துக் கேட்டான்.

"இவன் என் சிஷ்யன். நீ மேலே சொல்லு. சிவகாமி அம்மையின் நடனம் அரங்கேறுவதாக இருந்தது. பிறகு?"

"சபை கூடி அரங்கேற்றம் நடந்து கொண்டிருந்ததாம். பாதி நடந்து கொண்டிருந்த போது, யாரோ தூதுவர்கள் வெகு அவசரச் செய்தியுடன் வந்திருப்பதாகத் தெரிந்ததாம். சக்கரவர்த்தி சபையிலிருந்து சட்டென்று எழுந்து போனாராம். அப்புறம் திரும்பிச் சபைக்கு வரவேயில்லையாம். குமார சக்கரவர்த்தியும், மந்திரி மண்டலத்தாருங்கூட எழுந்து போய்விட்டார்களாம். நாட்டியம் நடுவில் நின்று போய்விட்டதாம். அஸ்தமித்ததும் கோட்டைக் கதவுகளை அடைக்கும்படி எனக்குக் கட்டளை வந்தது. அவ்வளவுதான் எனக்குத் தெரியும். என்னவாயிருக்கலாம், சுவாமி? யுத்தம் ஏதாவது வரக்கூடுமா? ஆனால் காஞ்சி சக்கரவர்த்தியுடன் யுத்தம் செய்யக்கூடிய அரசன் இந்தப் பூமண்டலத்திலேயே இப்போது கிடையாதே?" என்றான் மருதப்பன்.

"அப்படிச் சொல்லக் கூடாது, மருதப்பா! இன்றைக்கு மணி மகுடம் தரித்து மன்னாதி மன்னர்களாயிருப்பவர்கள் நாளைக்கு..... ஆனால் அதைப் பற்றியெல்லாம் நாம் ஏன் பேச வேண்டும்? உன் மகன் சௌக்கியமா?" என்று சந்நியாசி கேட்டார்.

"தங்கள் கிருபை சுவாமி, சௌக்கியமாயிருக்கிறான்!" என்றான் மருதப்பன்.

மருதப்பனுடைய மகனை ஒரு சமயம் பாம்பு தீண்டி அவன் உயிர் பிழைப்பதே துர்லபம் என்று தோன்றியது. அச்சமயம் இந்த புத்த பிக்ஷு மணிமந்திர ஔஷதங்களினால் அந்தப் பிள்ளையைக் குணப்படுத்தினார். அவரிடம் மருதப்பன் பக்தி கொண்டதற்கு இதுதான் காரணம்.

"என்னால் ஒன்றுமில்லை, மருதப்பா! எல்லாம் புத்த பகவானின் கருணை. நான் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு மேலே பிக்ஷு நடந்தார். பரஞ்சோதியும் அவருடன் சென்றான்.

"அடிகளே! கோட்டைக் கதவைச் சாத்தும்படி கட்டளை பிறந்திருக்கும்போது உங்களை மட்டும் காவலன் எப்படி விட்டான்?" என்று பரஞ்சோதி கேட்டான்.

"எல்லாம் இந்தக் காவித் துணியின் மகிமைதான்!" என்றார் புத்த பிக்ஷு.

"ஓஹோ! பல்லவ சக்கரவர்த்தியின் இராஜ்யத்தில் காவித் துணிக்கு அவ்வளவு கௌரவமா? ஆனால் சமணர்கள் மட்டும் ஏன்......?"

"சமணர்கள் ராஜரீக விஷயங்களில் தலையிட்டார்கள். நாங்கள் அந்த வழிக்கே போவதில்லை. இராஜ வம்சத்தினரின் முகத்தைக் கூடப் பார்ப்பதில்லையென்று வைத்துக் கொண்டிருக்கிறோம்.... போகட்டும்; உன்னுடைய உத்தேசம் என்ன? என்னுடன் பௌத்த விஹாரத்துக்கு வரப்போகிறாயா?"

"இல்லை, சுவாமி! நாவுக்கரசர் மடத்துக்கே போய்விடுகிறேன். வேறு எங்கேயும் தங்க வேண்டாமென்று என் தாயாரின் கட்டளை."

"அப்படியானால் இந்த இடத்தில் நாம் பிரிய வேண்டியது தான். போய் வருகிறாயா, தம்பி?"

"சுவாமி, நாவுக்கரசர் மடம் எங்கே இருக்கிறது? எப்படிப் போக வேண்டும்?" என்று பரஞ்சோதி கேட்டான்.

"ஏகாம்பரேசுவரர் கோயிலுக்குப் பக்கத்தில் இருக்கிறது. அதோ பார் கோயில் விமானத்தை!"

பரஞ்சோதி பார்த்தான். வெகு தூரத்துக்கு வெகுதூரம் பரவியிருந்த அந்த விசாலமான நகரில் எங்கே பார்த்தாலும் விமானங்கள் தெரிந்தன.

இந்த வரலாறு நிகழ்ந்த காலத்தில் — அதாவது ஏறக்குறைய *ஆயிரத்து முந்நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன்னர் — தமிழகத்

* சிவகாமியின் சபதம் எழுதப்பட்ட ஆண்டு 1944.



உலகப் பரிசு
பெற்ற
போஸ்டர்!

இந்தச் ''சமாதானச் சுவரொட்டி''க்கு அரிமா சங்கம் இந்த ஆண்டு பரிசு வழங்கியது. முப்பத்தைந்து நாடுகளிலிருந்து இரண்டு லட்சத்திற்கு மேல் இம்மாதிரியான சுவரொட்டிகளைச் சிறுவர்கள் வரைந்து அனுப்பியிருந்தார்கள். இத்தாலி நாட்டிலிருந்து அனுப்பப்பட்ட இந்தச் சுவரொட்டிதான் நடுவர்களால் சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

உலக அரிமா சங்கங்களின் மாநாடு ஜூலை 11 – 14 தேதிகளில் அமெரிக்காவில் செயிண்ட் லூயி நகரில் நடைபெற்றது. அப்போது இந்த போஸ்டருக்குப் பரிசு வழங்கப்பட்டது.

— ந. லி. பாபு.

துக் கோயில்களின் முன்வாசல் கோபுரங்கள் இப்போது இருப்பது போல் உயரமாக அமைந்திருக்கவில்லை. கோயில் கர்ப்பக் கிருஹத்துக்கு மேலேதான் விமானங்கள் அமைப்பது வழக்கம். இவையும் அவ்வளவு உயரமாக இருப்பதில்லை. மேலும் சிவன் கோயில் விமானங்கள், சமணப் பள்ளிகளின் விமானங்கள், அரண்மனை விமானங்கள் எல்லாம் ஏறக்குறைய ஒரே மாதிரியாயிருக்கும்.

''எங்கே பார்த்தாலும் விமான மயமாகக் காணப்படுகிறதே! நீங்கள் எதைச் சொல்கிறீர்கள்?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''இங்கிருந்து அடையாளம் சொல்லுவது கஷ்டம். இந்த வீதியோடு நேரே போ! ஏகாம்பரர் கோயிலுக்கு வழி அங்கங்கே விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம். கோயில் சந்நிதியில் வாகீசர் மடம் இருக்கிறது. ஜாக்கிரதை, தம்பி! காலம் விபரீதமாகிக் கொண்டு வருகிறது!'' என்று சொல்லிக் கொண்டே புத்த பிக்ஷு அங்கிருந்து பிரிந்த வேறொரு வீதி வழியாகச் சென்றார்.

வாலிபப் பிரயாணி நேரே பிக்ஷு காட்டிய திக்கை நோக்கிச் சென்றான். அக்காலத்தில் தென் தேசத்திலேயே மிகவும் பிரசித்தி பெற்று விளங்கியது காஞ்சிமா நகரம். அந்நகரின் வீதி ஒவ்வொன்றுமே தேரோடும் வீதியைப் போல் விசாலமாக அமைந்திருந்தது. வீடுகள் எல்லாம் மாளிகைகளாகவே இருந்தன. ஆங்காங்கே கல்லாலான தூண்களின்மேல் விசாலமான அகல்களில் தூங்கா விளக்குகள் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. வீதிகளில் 'ஜே ஜே' என்று போவோரும் வருவோருமாய் ஏகக் கூட்டமாயிருந்தது. கடைத் தெருக்களின் காட்சியையோ சொல்ல வேண்டாம். காசி முதல் கன்னியா குமரி வரையில் பரத கண்டத்தில் விளையும் பொருள்களெல்லாம் அந்தக் கடை வீதிகளில் கிடைக்கும். புஷ்பக் கடைகளாக ஒரு பக்கம்; பழக் கடைகளாக ஒரு பக்கம்; பட்சணக் கடைகளாக ஒரு பக்கம்; தானியக் கடைகள் ஒரு பக்கம்; முத்து இரத்தின வியாபாரிகளின் கடைகள் இன்னொரு பக்கம் — இப்படிக் கடை வீதியானது எல்லையில்லாமல் வளர்ந்து கொண்டே போயிற்று.

பரஞ்சோதி அளவில்லா வியப்புடன் மேற்கூறிய வீதிக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டு போனான். ஆங்காங்கே ஜனங்கள் கூட்டமாய் நின்ற இடங்களில் எல்லாம், சிவகாமி அம்மையின் நடன அரங்கேற்றம் நடுவில் நின்று போனதைப் பற்றியும், கோட்டைக் கதவுகளைச் சாத்தும்படி

# கேட்கும் ஸின்த்தால் எதுவோ,
# கிடைக்கும் ஸின்த்தால் அதுவே



''உங்க மனைவியோட தூக்கத்தில் நடக்கிற வியாதிக்குப் பத்து வருஷங்கள் கழித்து ட்ரீட்மெண்ட்டுக்காக வந்திருக்கீங்களே, ஏன்?''

''இப்பக் கொஞ்ச நாளாத் தூக்கத்தில் நடக்கிறதுக்கு என்னையும் துணையாக் கூப்பிட்டுத் தொந்தரவு பண்ண ஆரம்பிச்சுட்டா, டாக்டர்!'' — ஞா. ஞானமுத்து.





''இந்தக் காலத்துல எதெதுக்குத்தான் பாராட்டு விழா நடத்தறதுன்னு ஒரு வரைமுறையே இல்லாமப் போச்சு!''

''எதை வச்சு அப்படிச் சொல்றே?''

''அந்த மகளிர் மன்றத்துல, சமையலில் மிகப் பெரிய சேவை புரியும் இனிப்பு, காரம், உப்பு, புளிப்பு இதுங்களுக்குப் பாராட்டு விழா நடத்தப் போறாங்களாம்!'' — திருமாளம் சேதுராமன்.

---

கட்டளை பிறந்திருப்பதைப் பற்றியுமே பேசிக் கொண்டிருந்ததை அவன் கேட்டுக் கொண்டு நடந்தான். சற்று நேரத்துக்கொரு தடவை அவன் எதிரே வந்தவர்களிடம், ''ஏகாம்பரேசுவரர் கோயில் எது?'' என்று கேட்டான். ''அதோ!'' என்று அவர்களும் சுட்டிக் காட்டிவிட்டுப் போனார்கள். ஆனாலும் ஏகாம்பரேசுவரர் கோயிலை அவன் அடைந்தபாடில்லை. புதிதுபுதிதாக ஒரு பெரிய நகரத்தைப் பார்க்கும் அதிசயத்தில் மூழ்கியிருந்தபடியால் பரஞ்சோதியும் கோயிலைச் சீக்கிரமாகக் கண்டு பிடிப்பதில் அவ்வளவு கவலையுள்ளவனாயில்லை.

இப்படி அவன் வீதி வலம் வந்து கொண்டிருக்கையில் திடீரென்று ஓரிடத்தில் ஏகக் கூச்சலும் குழப்பமும் உண்டாவதைப் பார்த்தான். ஜனங்கள் நாலாபுறமும் சிதறி ஓடினார்கள். ''கோயில் யானைக்கு மதம் பிடித்து விட்டது! ஓடுங்கள்! ஓடுங்கள்!'' என்ற கூக்குரலோடு சேர்ந்து, குழந்தைகள் வீறிடும் சத்தம், ஸ்திரீகள் அலறும் சத்தம், குதிரைகள் கனைக்கும் சத்தம், வீட்டுக் கதவுகளைத் 'தடால் தடால்' என்று சாத்தும் சத்தம், மாடுகள் 'அம்மா' என்று கத்தும் சத்தம், கட்டை வண்டிகள் 'கட கட' வென்று உருண்டோடும் சத்தம் இவ்வளவும் சேர்ந்து சொல்ல முடியாத அல்லோலகல்லோலமாகிவிட்டது.

பரஞ்சோதி ஒரு கணம் திகைத்து நின்றான். தானும் ஓட வேண்டுமா, எந்தப் பக்கம் ஓடுவது என்று அவன் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தபோதே, அவனுக்கெதிரே நடந்த சம்பவங்களை அவனுடைய கண்கள் கவனித்தன. தெருவில் அவனுக்கு முன்னால் சற்றுத் தூரத்தில் ஒரு பல்லக்கு சென்று கொண்டிருந்தது. அதில் சௌந்தர்ய தேவதை என்று சொல்லக் கூடிய ஓர் இளம் பெண்ணும் அவளுடைய தந்தையெனத் தோன்றிய பெரியவர் ஒருவரும் இருந்தார்கள். பல்லக்கைத் தூக்கிச் சென்றவர்கள் அவர்களுக்குப் பின்னால் எழுந்த கூச்சலையும் கோலாகலத்தையும் கேட்டுவிட்டுப் பல்லக்கைக் கீழே வைத்துவிட்டு நாலா பக்கமும் சிதறி ஓடினார்கள்.

அதே சமயத்தில் அவனுக்குப் பின்னால் வெகு சமீபத்தில் மதங்கொண்ட யானை ஒன்று பூமி அதிர ஓடி வந்தது.

இதையெல்லாம் கவனித்த பரஞ்சோதி ஒரு கணம் தயங்கி நின்றான். அடுத்த கணத்தில் ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாய்ச் சட்டென்று கையிலிருந்த மூட்டையைக் கீழே வைத்து அவசரமாக அவிழ்த்தான். அதற்குள்ளிருந்த வேல் முனையை எடுத்துத் தன் கையில் வைத்திருந்த தடியின் முனையில் செருகிப் பொருத்தினான். பொருத்திய வேலை அவன் வலது கையில் தூக்கிப் பிடித்ததற்கும் மதங்கொண்ட யானை அவன் நின்ற இடத்திற்கு அருகே வருவதற்கும் சரியாயிருந்தது.

அவ்வளவுதான்! பரஞ்சோதி தன் முழு பலத்தையும் கொண்டு வேலை வீசினான். அது யானையின் இடது கண்ணுக் கருகில் பாய்ந்தது. யானையின் தடித்த தோலைப் பொத்துக் கொண்டு உள்ளேயே சென்று விட்டது. யானை பயங்கரமாக ஒரு முறை பிளிறிற்று. துதிக்கையால் வேலைப் பிடுங்கிக் காலின் கீழே போட்டு மிதித்தது. பிறகு வேலை எறிந்த வாலிபன் நின்ற பக்கம் திரும்பிற்று.

(தொடரும்)



### பாலகுமாரனின் புதிய புத்தகங்கள்

- பயணிகள் கவனிக்கவும் ரூ. 42.00
- தலையணைப் பூக்கள் ரூ. 28.00
- மேய்ச்சல் மைதானம் ரூ. 22.00
- சுஜாதாவின் அடுத்த நூற்றாண்டு ரூ. 18.00
- குறைந்த செலவில் நீங்களும் வீடு கட்டலாம் ரூ. 20.00

சொந்த வீடு கட்ட கடன் தரும் நிறுவனங்களிலிருந்து எவ்வாறு கடன் பெறுவது. மனையடி சாஸ்திரம், சிறந்த மாதிரி பிளான்கள், மேலும் பல யோசனைகளை ஓய்வு பெற்ற HighwaysChief Engineer, R. சுப்பிரமணியம் எளிய முறையில் தெளிவாக கூறுகிறார்.

- கல்கி சிறுகதைப் போட்டியில் 'சங்கரன்' கதை எழுதி பரிசு பெற்ற சத்தியப்பிரியனின் ''காதலாகிக் காத்திருந்து'' ரூ. 22.00.
- கீதா பென்னெட்டின்'' ஆதார சுருதி'' ரூ. 24.00 பாலகுமாரன் இந்தக் கதைகள் எனக்கு தகவல் தந்தது மட்டுமின்றி மனிதர்களைப் பற்றி ஆச்சரியமும் தந்தது என்கிறார் முன்னுரையில்.
- ராஜேஷ்குமார் : காணாமல் போன ஆகாயம் ரூ. 20.00
- வாஸந்தி : மீண்டும் நாளை வரும் ரூ. 21.00
- சுபா : கரையோரம்காத்திரு ரூ. 27.00
- P.K.P. எனக்கு மட்டும் தெரியும் ரூ.20.00

கிடைக்குமிடம்

**குமரிப் பதிப்பகம்**

8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611.001.

விரிவான விலைப்பட்டியலை தபாலில் பெற ரூ.1.00 அனுப்பவும்.

பள்ளி நூலகங்கள் : புத்தக வியாபாரிகளுக்கு கழிவு உண்டு.



## ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் லிமிடெட்

பதிவு அலுவலகம் : திருநெல்வேலி-627 006, தொலைபேசி : 23474

நிர்வாக அலுவலகம் : பள்ளத்தூர்-623 107, தொலைபேசி : 72 & 108

மத்திய அலுவலகம் : சென்னை-600 002, தொலைபேசி : 867886 & 869344

**தென்னகத்தில் மக்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒப்பற்ற சீட்டு நிறுவனம்**

4 மாநிலங்கள் | 70 கிளைகள் | 42 ஆண்டு சேவை

நிதி நிலைமை 31.3.89-ல் உள்ளபடி (தணிக்கை செய்யப் பெற்றது)

| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் : | ரூ. 25.00 | லட்சம் |
| செலுத்தப்பட்ட மூலதனமும், ரிசர்வ் நிதியும் : | ரூ. 19.00 | லட்சம் |
| ஆஸ்திகள் : | ரூ. 28.67 | கோடிக்கு மேல் |
| சீட்டு நடைமுறை நிதி : | ரூ. 34.72 | கோடிக்கு மேல் |

டைரக்டர்கள் : AR. விஸ்வநாதன் S.PR. ராமஸ்வாமி M.A.,

எங்கள் 70 கிளைகள் மூலமாக பல்வேறு மதிப்புள்ள மாதம் ஒருமுறை, இருமுறை, மும்முறை, தினசரிச் சீட்டுகள் நடத்தி வருகிறோம். மேலும் ரூ. 25,000/- முதல் 500,000/-வரை உயர் மதிப்புள்ள சீட்டுகளைப் பிராந்திய குருப்புகளாக எங்கள் சென்னை மத்திய அலுவலகம், மதுரை, திருச்சி, கோயம்புத்தூர், திருநெல்வேலி, பெங்களூர், காரைக்குடி, பாண்டிச்சேரி கிளைகளில் நடத்தி வருகிறோம்.

Dr. L-RM. அருணாசலம், B.E., M.E. (PH) M.I.E.
பொதுஜன தொடர்பு அதிகாரி




AR. பழனியப்பன்,
நிர்வாக அதிகாரி

RM. அருணாசலம்
நிர்வாக இயக்குநர்

''திருப்தியா கர்னல்?'' இன்றைக்கு ஒரு ராத்திரிதான். ஃபைலைக் கையில் எடுத்துப் போக நான் விரும்பவில்லை.''

கேப்டன் யாதவ் தரையைக் கம்பளியால் மூடி, நாற்காலியைப் பழைய நிலையில் வைத்து, கதவு திறந்தான்.

''மல்ஹோத்ரா.''

வாசல் மாருதியில் இருந்து மல்ஹோத்ரா, குரலுக்கு அடிபணிந்து, பிஸ்கட் கண்ட நாய் போல் ஓடி வந்தான்.

''போகலாமா?''

மாருதியின் சீற்றத்தால் ஏற்பட்ட புழுதி அடங்கும் வரை பார்த்திருந்து விட்டு, கேப்டன் யாதவ் கதவை வெளியே பூட்டினான். மரத்தடியில் இளைப்பாறிக் கொண்டிருந்த தன் ஸ்கூட்டர் நோக்கி நடந்தான்.

சிறுவர்கள் இன்னும் பந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஏழைகள் பீடி சுற்றினார்கள். குழந்தைகள் பாலுக்கு அழுதார்கள்.

கரோல்பாகின் இரைச்சலான தெருக்களில் எஸ்கார்ட் கம்பெனியின் அந்த மோட்டார் சைக்கிள் படபடவென்று நழுவியது. சுந்தர் லேனில் நுழைந்தது.

ஷூக்களும், நைட்டிகளும், பொம்மைகளும், பீங்கான் தட்டுகளும், ஸ்கூல் பைகளும், டீ ஷர்ட்களும் இறைந்து கிடந்த நடைபாதையோரங்களில் மக்கள் பேரம் பேசிக் கூட்டமாக ஏமாந்து கொண்டிருந்தார்கள்.

ஒருவன் மோவாயைத் தூக்கிக் காட்டியிருக்க, தாற்காலிக சலூன், கத்தியைத் தீட்டிக் குந்தி உட்கார்ந்து ஷேவ் செய்தான் முண்டாசு கட்டிய ஓர் உ. பி. ஆசாமி. மைசூர் ஹோட்டலுக்கும், கோல்ட் ஸ்பாட் ஸ்டாக்கிஸ்ட்டின் கிடங்கிற்கும் நடுவிலிருந்த 'சாந்தினி ஜ்வெல்லர்ஸை'த் தாண்டியதும் மோட்டார் சைக்கிள் நின்றது.

உட்கார்ந்தபடியே ஸ்டாண்ட் போட்டு விட்டு இறங்கியவன் மல்ஹோத்ரா. பகலில் கர்னலுக்கு வண்டியோட்டியவன்.

இறங்கியவன் சுற்று முற்றும் பார்த்தான். மனத்தில் இருந்த திருட்டுத்தனத்தைப் பார்வை பிரதிபலிக்கவில்லை.

நடைபாதையில் ஏறினான். சாந்தினி ஜ்வெல்லர்ஸ் மூடும் தருவாயில் இருந்தது. பாதி இமை மூடிய ஷட்டரின் கீழே குனிந்து நுழைந்தான்.

சாந்தினி ஜ்வெல்லர்ஸின் மாடியில் இருந்த கண்ணாடிச் சுவருக்கு அப்பால் இருந்த ஒரு திரை விலகியது. கண்ணாடிக்குப் பின்னால் தெரிந்த முகம், கடையில் நுழைந்த மல்ஹோத்ராவைப் பார்த்ததும் லேசான அதிர்ச்சியைக் காண்பித்தது. திரை உடனே மூடிக் கொண்டது.

கீழே இருந்த இண்டர்காம் ஒலித்து, மல்ஹோத்ரா மேலே அனுமதிக்கப்பட்டான்.

மல்ஹோத்ரா துடிக்கும் இதயத்துடன் மாடியை அடைந்து, திரை மூடிய கண்ணாடிக் கதவைத் திறந்தான். ஷோரூமின் கண்ணாடி அலமாரிகளைக் கனமான கித்தான்கள் திரையிட்டிருந்தன. மின்சாரத்தில் ஜ்வலித்த நகைகள் உறங்கப் போயிருந்தன.

''மல்ஹோத்ரா... நேரில் வராதே என்று உன்னிடம் நான் சொல்லவில்லை?''

''ஸாஹப். இது போனில் பேசுகிற விஷயமில்லை.''

''நாம் வேறெங்காவது சந்தித்திருக்கலாம்.''

''என்னை யாரும் பார்க்கவில்லை அமீர் சாஹப்.''

''என்ன சொல்?'' என்று கேட்டான் அமீர் என்று அழைக்கப்பட்டவன்.

முழுப் பெயர் அமீர் ஜவஹர். இருபத்திரண்டு வயது. கருத்த சுருட்டை முடி. நூற்று எழுபத்தைந்து செண்டி மீட்டர். அறுபத்திரண்டு கிலோ. மெலிந்த உறுதியான தேகம். பார்வையில் கூர்மை. அது மல்ஹோத்ராவைத் துளைத்தது. எடை போட்டது.



மல்ஹோத்ரா சட்டைக்குள்ளிருந்து ஒரு மினி ரிகார்டர் எடுத்து மேஜை மேல் வைத்தான். பித்தானை அழுத்தினான். டேப் சுழன்று, பதிவானதைச் சொல்லத் தொடங்கியது.

— 'போர் விமானங்களுக்கு ஆர்டர் கொடுப்பது போன்ற மேலோட்டமான இந்த ஆர்டரில் உள்ளடங்கி இருக்கும் இன்னொரு ஆர்டர் தெரியுமா உனக்கு?'

'— தெரியும் கர்னல். வித் அக்ஸஸரீஸ் என்ற வார்த்தைகளுக்குப் பின்னால் குறிப்பிடப்பட்டிருக்கும் நம்பர்கள் விமானத்தின் உதிரி பாகங்களைக் குறிப்பிடவில்லை. ரஷ்யாவிலிருந்து நாம் தருவிக்க இருக்கும் சில நவீன ஆயுதங்களின் ரகசிய எண்கள் அவை' —

மல்ஹோத்ரா டேப்பை நிறுத்தினான்.

''கர்னலுக்கும், கேப்டனுக்கும் நடுவில் இன்று காலை நடந்த சம்பாஷணையின் ஒரு பகுதி. ஸாஹப். உங்களுக்கு அந்தப் பேப்பர்கள் வேண்டுமா?''

அமீர் ஜவஹரின் பார்வையில் கூர்மை குறைந்தது. கண்கள் கனவுகளைக் காட்டின. வெகு நாட்களாகக் காத்திருந்த ஒரு சந்தர்ப்பம். இந்தப் பேப்பர்களைத் தனது மேலிடத்தில் சேர்த்தால், அதுவே தனது தேசத்திற்குச் செய்யும் மிகப் பெரிய சேவை என்று நினைத்துக் கொண்டான்.




''வேண்டும். நிச்சயம் வேண்டும்'' என்றான் அமீர் ஜவஹர்.

(தொடரும்)



* அதே கேஸ்தான்!



* முதுகெலும்புகள்...

* பேப்பர் கார்த்திக், இராணிப்பேட்டை.

? தேசிய முன்னணி அரசில் சமீபத்தில் ஏற்பட்ட சிக்கல்களும் அவை தீர்க்கப்பட்டிருக்கும் விதமும் பிரதான கட்சியின் பலத்தைக் காட்டுகிறதா அல்லது பலவீனத்தையா?

! சிக்கலை உண்டாக்கிக் கொண்டது பலவீனத்தையும் அதை அவிழ்த்துக் கொண்டது பலத்தையும் காட்டின!

* கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.

? 'ஜெயலலிதாவுக்கு அரசியல் அனுபவமோ தெளிவோ கிடையாது' என்று திருநாவுக்கரசு கூறியுள்ளாரே?

! அதை இப்போதுதான் அவர் புரிந்து கொண்டிருக்கிறார் என்பது அவருக்கும் அதே கேஸ்தான் என்பதை உணர்த்துகிறதே!

* க. சரவணன், மாநெல்லூர்.

? நீங்கள் சமீபத்தில் பார்த்த நல்ல தமிழ்த் திரைப்படம்...?

! கேளடி கண்மணி. ஆரம்பத்தில் 'தெரியாத்தனமாக வந்து மாட்டிக் கொண்டோமே' என்று பயந்தே போனேன்... போகப் போக 'நல்லவேளை, நேரம் ஒதுக்கினோமே' என்று மகிழ்ந்தே போனேன்... வஸந்த்: **Chip of the old block.** KB பெருமைப்படலாம். எஸ். பி. பி: மூச்சு விடாமல் பாராட்டலாம். அவரளவுக்கு 'தம்' இல்லையே நமக்கு! இளையராஜா மீட்டுவது நம் இதய நரம்புகளை. அந்தச் சிறுமியின் நடிப்பு: அவள் தாயின் சுவாசக் காற்று போல் அத்தனை **Precious.** ராதிகா ஆற்றல்: **Blooming maturity.**

* வெ. ஸ்ரீகுமார், எர்ணாகுளம்.

? அரசியலில் வி. பி. சிங்குக்கும் 'ஜெ'க்கும் என்ன வித்தியாசம்?

! குழப்பங்களுக்கு மத்தியிலும் தலைவராக நீடிப்பவர் வி. பி. சிங். தலைவராக நீடித்தபடி குழப்பங்களை உருவாக்குகிறவர் ஜெ!

* அ. கற்பூர பூபதி, சின்னமனூர்.

? "தேவிலாலும் சௌதாலாவும்தான் என் தலைவர்கள்; நான் வெறும் பொம்மைதான்" என்கிறாரே, அரியானா முதன் மந்திரி உகம் சிங்?

! ஹுக்கும் என்றால் 'கட்டளை' என்று பொருள். ஃபோனை எடுத்து, "நான்தான் ஹுக்கும் பேசறேன்; தங்கள் ஹுக்கும் என்னவோ?" என்றுதான் கேட்கிறாராம் முதல்வர்! (மை ஹுக்கும்... ஜோ ஹுக்கும்?) இந்த ஜோக்கைக் கூறியவர்... அத்வானி!

* என். ஆர். சுப்பிரமணியன், பூனாம்பாளையம்.

? "கட்சிக்குள் இருக்கும் அதிருப்தியை மக்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்கிறாரே, வி. பி. சிங்?

! அப்புறம் மக்களின் அதிருப்தியைக் கட்சி ஏற்க வேண்டியிருக்குமே!

* எல். மாறன், மேல்பட்டி.

? குமுதத்தில் தோன்றிய, 'கறுப்புப் பண மன்னன், கருப்பண்ணன்' யாரையோ நினைத்து எழுதியது போல் தோன்றுகிறதே?

! ஆமாம், கறுப்புப் பண மன்னர்களை எண்ணித்தான் எழுதப்பட்டது.

* அ. முஸ்தபா, தக்கோலம்.

? "சே, போயும் போயும் இந்தத் தொழி

# தாயக மறுமலர்ச்சிக் கழகம் என்ன ஆயிற்று?



* மூக்குக்கு மேல் கோபம்!

## நீங்கள் கேட்டவை — தராசு

லுக்கு ஏன் வந்தோம்'' என்று என்றாவது எண்ணியதுண்டா?

! அப்படி எண்ணுவதானால் முப்பத்து மூன்று ஆண்டுகளாக ஏன் இதிலேயே நிலைத்திருக்க வேண்டும்? செய்யும் தொழில் தெய்வம்; இந்த எழுதுகோல் தெய்வம்.

* என். முருகேஷ், பெருஞ்சேரி.

? 'தாயக மறுமலர்ச்சிக் கழகம்' என்ன ஆயிற்று?

! இப்படிக் கேட்டோமோ இல்லையோ, டி. ஆருக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்து விட்டது! ''அக்டோபர் பிறந்த நாளில் பத்தாயிரம் பேருக்கு இலவச அரிசி; அரிசி விலை ஏற்றம் குறித்து உண்ணாவிரதம்; சிறைவாசம்; ஜனவரியில் தனிக் கட்சி; பல ஊர் சென்று பிரசாரம்; பழனி இடைத் தேர்தலில் முதல் தேர்தல் பிரவேசம்; பாண்டிச்சேரியிலும் போட்டியிட்டு ஜனநாயகப் பணி; இப்போது மலிவு விலை மதுவை எதிர்த்துப் பிரசாரம்; சினிமாவிலும் பிசி — 'பிரேம சரித்திரா' தெலுங்கில்; அதுவே தமிழில் 'சாந்தி, என் சாந்தி; தவிர, 'தெய்விக ராக'மும் தயாராகிறது; 'மாரியாத்தா கோயி'லும் உருவாகிறது; 'சிலம்போசை' என்ற பத்திரிகையும் ஆரம்பிக்கப் போகிறேன்'' என்று அக்டோபர் டு ஆகஸ்ட் அடுக்க ஆரம்பித்து விட்டார்! போதாக் குறைக்கு, ''என் வீட்டை இடித்தார்கள் சரி; ஆனால் 'இதே' சமநோக்குப் பார்வை எல்லா இடத்திலும் செயல்படுகிறதா?' என்றுதான் கேட்கிறேன்'' என்று சீறினார் பாருங்கள்! ஓடியே வந்து விட்டேன்!

* கே. எஸ். முத்து, கள்ளியம்புதூர். *

? அடுத்த பிரதமர் யார்?

! 'நான்தான்' என்கிறார் ராஜீவ். 'நான் தான்' என்கிறார் தேவிலால். 'நானேதான்' என்கிறார் வி. பி. சிங். ஓசைப்படாமல் ஒரு பி. ஜே. பி. காரர் இடையில் புகுந்து பதவியைத் தட்டிக் கொண்டு போய் விட்டால் வியப்பதற்கில்லை!

* கே. மகேஷ், சங்கராபுரம்.

? உத்தரப் பிரதேச முதல்வருக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடி குறித்து...?

! நெருக்கடி தோன்றும் இடத்தில் பொம்மை இருப்பார்; நெருப்பு அணைப்பார்.

* பா. லட்சுமணன், பழநி.

? சென்ற வாரம் தலையங்கம் கண்டு அதிர்ச்சி அடைந்தேன்; இன்னும் ஐந்து ஆண்டுகளுக்கு அரசுப் பணிகளுக்கு



* ...மிஸ்ஸிங்! * நெருப்பு அணைப்பார்!

ஆட்களை எடுக்கா விட்டால் வேலையில்லாத் திண்டாட்டம் தீவிரமாகாதா?

! அந்த ஒரு நடவடிக்கையை மட்டும் எடுத்தால் தீவிரமாகும். தலையங்கத்தில் கூறப்பட்டுள்ள வேறு பல யோசனைகளையும் அமுல்படுத்தினால் வேலை வாய்ப்புக்கள் பெருகும். அதிர்ச்சிக்குப் பதில், நீங்கள் குளிர்ச்சி அடைவீர்கள்!



* கே. பி. பெருமைப்படவாய்!

* ஆ. புகாரி, தக்கோலம்.

? ஆசியாவின் சிறந்த பத்திரிகைக்கான பரிசை 'இந்தியா டுடே' இரண்டாவது தடவை பெற்றுள்ளது; இங்கிலாந்துக்கு எதிரான இரண்டு ஒரு தின கிரிக்கெட் போட்டிகளிலும் இந்தியா வென்றுள்ளது! என்ன சொல்கிறீர்கள்?

! 'இந்தியாவின் கௌரவம் உயர்கிறது' என்கிறேன். 'இ-டுடே' மூன்றாவது முறையும் வெற்றி பெற வாழ்த்துவோம். நமது கிரிக்கெட் அணியினர் டெஸ்ட் தொடரிலும் வெற்றி பெற வாழ்த்துவோம்.

* ஏ. ஈஸ்வரன், தேலூர் மேட்டுக்கடை.

? கட்சியை விட்டுத் தூரத்தியும் போக மறுக்கும் ராமராஜனைப் பற்றி...?

! 'மறு உத்தரவு வரும் வரை காத்திருப்பேன்' என்று கூறும் காளிமுத்துவைத்தான் கேட்க வேண்டும்! முதுகெலும்புகள் மிஸ்ஸிங்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:
*
கே. எஸ். முத்து,
தோட்டத்துக்காரர் வீடு,
கள்ளியம்புத்தூர், — 638 056,
பெரியார் — மா. வ.

# பொன்னியின் செல்வன்

## முடிவுரை

நேயர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மூன்றரை ஆண்டு காலம் "பொன்னியின் செல்வன்" கதையைத் தொடர்ந்து படித்து வந்ததில் நேயர்கள் காட்டிய பொறுமையையும் ஆர்வத்தையும் அன்பையும் போற்றி வணங்குகிறேன். கதை ஆரம்பித்துச் சில மாதங்கள் வரையில் நேயர்களிடையே இது இவ்வளவு ஆர்வத்தை உண்டாக்குமென்று தோன்றவில்லை. பழந் தமிழ் நாட்டுச் சரித்திரப் பெயர்கள் சிலருக்குப் பெரிதும் தலைவேதனை உண்டாக்கி வந்ததாகத் தெரிந்தது. போகப் போக, அந்தத் தலைவேதனையை நேயர்கள் எப்படியோ போக்கிக் கொண்டார்கள். இதற்கு முன்னால் எந்தத் தொடர் கதையையும் நேயர்கள் இவ்வளவு ஆர்வத்துடன் படித்ததில்லையென்று சொல்லும் நிலைமை வெகு விரைவில் ஏற்பட்டது. அதே ஆர்வம் தொடர்ந்து நிலைபெற்று இருந்து வந்தது.

கதை ஆரம்பித்த மறு வருடம் ஆடிப் பதினெட்டாம் பெருக்கு தினத்தில் பரமக்குடியிலிருந்து பல நண்பர்கள் கையெழுத்திட்டுப் "பொன்னியின் செல்வன்" கதைக்குத் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். "பொன்னியின் செல்வன்" முதல் அத்தியாயம் பதினெட்டாம் பெருக்குத் திருவிழாவன்று வீர நாராயண ஏரிக் கரையில் தொடங்குகிறது அல்லவா?

பின்னர் அடிக்கடி பல நேயர்கள் கடிதம் எழுதித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டிருந்தார்கள்.

இந்தப் பாராட்டுதல்களையெல்லாம் கதையின் ஆசிரியருக்குரியவையாக நான் கருதவில்லை. பழந் தமிழ் நாட்டின் சரித்திரத்துக்குரிய பெருமையாகவே கருதினேன். உண்மையிலேயே, தமிழ் நாட்டின் பழைய வரலாறு தமிழர்கள் மிகவும் பெருமிதம் கொள்ளக் கூடிய வரலாறுதான். சென்ற சில ஆண்டுகளாகத்தான் தமிழகத்தின் பழைய சரித்திர ஆராய்ச்சி முறையாக நடைபெற்றுவருகிறது. கல்வெட்டுக்களும் செப்புப் பட்டயங்களும் படிக்கப் பட்டு வருகின்றன. வரலாற்று ஆராய்ச்சியாளர் அந்த ஆதாரங்களை வைத்துத் தமிழகத்தின் சரித்திரத்தை அங்கங்கே பகுதி பகுதியாக நிர்மாணித்து வருகிறார்கள்.

சரித்திரத்தின் எந்த ஒரு காலப் பகுதியைப் பற்றியும் பரிபூரணமாகவும் ஐயந்திரிபுக்கு இடமின்றியும் வரலாறு எழுதப்பட்டு விட்டதாகச் சொல்வதற்கில்லை.

ஆயிரத்து நானூறு வருடங்களுக்கு முன்னால் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு நீடித்து அரசு புரிந்த பல்லவ சக்கரவர்த்திகளின் வரலாறு ஓரளவு ஆராயப்பட்டிருக்கிறது. அந்த இரு நூறு ஆண்டுகளைப் பற்றிய சரித்திர வரலாற்று விவரங்கள் நன்கு தெரிய வந்திருக்கின்றன.

பின்னர், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கி முந்நூறு ஆண்டு புகழுடன் விளங்கிய விஜயாலய சோழ பரம்பரையின் காலத்து நிகழ்ச்சிகளும் ஓரளவு ஆராயப்பட்டிருக்கின்றன. இக் காலத்து நிகழ்ச்சிகளைப் பற்றித் திட்டமாக நிர்ணயிக்க முடியாதபடி பல ஐயப்பாடுகள் தோன்ற இடமிருக்கிறது. ஆயினும், சில சரித்திரச் சம்பவங்கள் மறுக்க முடியாத தகுந்த ஆதாரங்களுடன்

அமரர் கல்கி

நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன.

இவற்றுள் எல்லாம்மிகமுக்கியமானது, தமிழகத்துக்கு இணையற்ற பெருமையை அளிக்கக் கூடியது, உலக சரித்திரத்திலேயே ஒப்பற்ற சம்பவம் என்று கொண்டாடுவதற்குத் தகுதியானது ஒன்று உண்டு. சுந்தர சோழரின் இரண்டாவது திருக் குமாரனாகிய அருள்மொழி வர்மன், (பிற்காலத்தில் **இராஜ ராஜ சோழன்** என்று புகழ் பெற்ற பேரரசன்.) இளம் பிராயத்தில் தான் எளிதில் பெற்றிருக்கக் கூடிய சோழ சாம்ராஜ்யத்தை வேண்டாம் என்று மறுத்து, உத்தம சோழனுக்குப் பட்டம் கட்டி வைத்தது தான்.

**''சுந்தர சோழருக்குப் பின்னர் அவனுடைய மகன் அருள்மொழி வர்மனே சோழ சிங்காதனம் ஏறி அரசாள வேண்டும் என்று சோழ நாட்டு மக்கள் பெரிதும் விரும்பினார்கள். ஆயினும் அருள்மொழி வர்மன் தன் பெரிய பாட்டனாகிய கண்டராதித்தனுடைய புதல்வனும் தனக்குச் சிறிய தகப்பன் முறையிலிருந்தவனுமான உத்தம சோழனுடைய உரிமையை மதித்து அவனுக்கு முடிசூட்டி வைத்தான்''** என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் அறுதியிட்டு உறுதி கூறுகின்றன.

இந்த நிகழ்ச்சியை மற்றும் பல செப்பேடுகளும் கல்வெட்டுக்களும் அந்தக் காலத்தில் அறிஞர்கள் பலரால் எழுதப்பட்ட நூல்களும் உறுதிப்படுத்துகின்றன.

அருள்மொழி வர்மன் திருமுடி சூட்டிக் கொள்ள வேண்டுமென்று இராஜ்யத்தின் மக்கள் விரும்பினார்கள்; உற்றார் உறவினர் விரும்பினார்கள்; அக்காலத்தில் மிக்க வலிமை பெற்றிருந்த சோழப் பெரும் படையின் வீரர்கள் அனைவரும் விரும்பினார்கள்.

அவ்வாறு எல்லாவித ஆதரவும் அநுகூலங்களும் அருள்மொழி வர்மனுக்கு இருந்தும், அவன் சாம்ராஜ்யத்தை உத்தம சோழனுக்கு அளித்துப் பட்டம் கட்டுவித்தான்.

உலக சரித்திரத்திலும் காவிய இதிகாசங்களிலும் இதற்கு ஒப்பான இன்னொரு அரும் பெரும் செயலைக் காணுதல் அரிது.

அசோக சக்கரவர்த்தி கலிங்க நாட்டுப் போரில் மகத்தான வெற்றி அடைந்த பிறகு, ''இனி யுத்தமே வேண்டாம்'' என்று முடிவு செய்ததைத் தான் அருள்மொழி வர்மன் தியாகத்துக்கு இணையாகக் கூறலாம்.

''பொன்னியின் செல்வன்'' கதையில் சிகரமான சம்பவம் அருள்மொழி வர்மனின் ஒப்பற்ற தியாகமேயாகும். கதையில் வரும் சகல நிகழ்ச்சிகளும் இந்த மகத்தான சம்பவத்தை நோக்கியே சென்று கொண்டிருக்கின்றன. அதனாலேயே இக்கதையின் ஐந்தாவது பகுதிக்குத் ''தியாக சிகரம்'' என்று பெயர் தரப்பட்டது.

இக்கதையின் சிகரமான நிகழ்ச்சி பொன்னியின் செல்வன் செய்த சாம்ராஜ்ய தியாகந்தான் என்பதைக் கதையைப் படித்து வந்த நேயர்கள் அனைவரும் உணர்ந்திருப்பார்கள் என்றே நம்புகிறேன். யாராவது அதை அறியவில்லையென்றால், அதற்குக் காரணம் ஆசிரியருடைய ஆற்றல் குறைவு என்றே சொல்ல வேண்டும். அந்தக் குறையைக் கதை ஆசிரியர் தாழ்மையுடன் ஒப்புக் கொண்டு நேயர்களிடம் மன்னிப்புக் கோர வேண்டியதுதான்.

''பொன்னியின் செல்வன்'' கதை வெளியாகி வந்த போதெல்லாம் நேயர்கள் ஒப்பற்ற ஆர்வம் காட்டி வந்தார்கள். பலர் பாராட்டிக் கடிதங்கள் எழுதி உற்சாகப் படுத்தியும் வந்தார்கள். நேயர்களிடமிருந்து வந்த கடிதங்களில் அப்போதெல்லாம் கருத்து வேற்றுமையே காணப்படவில்லை.

கதை முடிவடைந்த பிறகும் நூற்றுக் கணக்கான கடிதங்கள் வந்திருக்கின்றன. இக்கடிதங்களில் பெரிதும் கருத்து வேற்றுமை காணப்படுகிறது. பாதிப் பேர் கதையைப் பாராட்டிக் கதை முடிவையும் பாராட்டியிருக்கிறார்கள். இன்னும் பாதிப் பேர் கதை முடிந்தவிதத்தைக் குறைகூறியிருக்கிறார்கள்.



* சுந்தர சோழர்



* செம்பியன் மாதேவி



* பெரிய பழுவேட்டரையர் *



* அநிருத்தப் பிரம்மராயர்



* சின்னப் பழுவேட்டரையர்



* ஆழ்வார்க்கடியான்

சட்டென்று முடித்து விட்டதற்காகவும் பல கதாபாத்திரங்கள் பின்னால் என்ன ஆனார்கள் என்று சொல்லாமலே கதையை முடித்து விட்டதற்காகவும் வருந்தியிருக்கிறார்கள். காரசாரமாகக் கண்டனங்கள் எழுதியிருப்பவர்களும் உண்டு.

கண்டனமாகவும் குறை சொல்லியும் எழுதியிருப்பவர்கள் அனைவரும் கதையை இன்னும் வளர்த்தி எழுதியிருக்கலாம் என்றே அபிப்பிராயம் தெரிவித்திருப்பதை எண்ணி ஒருவாறு திருப்தி அடைகிறேன். மூன்றரை ஆண்டு தொடர்ந்து வெளியாகி வந்த கதையைக் குறித்து அலுப்பு அடைந்து ''எப்போது முடிக்கப் போகிறீர்?'' என்று கேளாமல், ''ஏன் இப்படித் திடுதிப்பென்று முடித்து விட்டீர்? ஏன் மேலும் வளர்த்தி எழுதியிருக்கக் கூடாது?'' என்று நேயர்கள் கேட்பது ஒருவாறு மகிழ்ச்சி அடைவதற்குரிய நிலைமைதான். ஆயினும் நேயர்களில் ஒரு பெரும் பகுதியினரைத் திருப்தி செய்ய முடியாமற் போனது பற்றி வருந்துகிறேன்.

''பொன்னியின் செல்வன்'' கதையை இப்போது முடித்திருப்பது போல் முடித்ததற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு.

1) முன்னமே குறிப்பிட்டது போல், கதையில் சிகரமான நிகழ்ச்சி பொன்னியின் செல்வன் தன் கையில் கிடைத்த மகா சாம்ராஜ்யத்தைத் தியாகம் செய்து இன்னொருவருக்கு முடி சூட்டியதேயாகும்.

ஆகையால், அந்தப் பெரு நிகழ்ச்சிக்குப் பிறகு கதையை வளர்த்திக் கொண்டு போவது ஆங்கிலத்தில் சொல்லப்படுவது போல், 'கிளைமாக்ஸு'க்குப் பிறகு 'ஆண்டி கிளைமாக்ஸ்'க்குப் போவதாக முடியும்.

நேயர்கள் பலர் இப்போது சீக்கிரம் முடித்து விட்டதற்காகக் குறை சொன்னாலும், இந்தக் கதை மேலும் வளர்ந்தால் விரைவில் அதே நேயர்கள் வேறு விதமாகக் குறைப்பட நேரிடும். ''எப்போது முடிக்கப் போகிறீர்?'' என்று ஆசிரியரை நேயர்கள் கேட்கும் நிலைமை விரைவில் வந்து விடும்.

2) பொதுவாக 'நாவல்கள்' எழுதுவதற்கும், முக்கியமாகச் 'சரித்திர நவீனங்கள்' எழுதுவதற்கும் சட்ட திட்டங்கள் ஏற்பட்டிருக்கவில்லை. (அப்படி ஏற்பட்டிருந்தால் அவற்றை நான் படித்ததில்லை.) ஒவ்வொரு ஆசிரியரும் தமக்குரிய முறையை வகுத்துக் கொண்டு எழுதுகிறார்கள்.

ஆயினும், முழுவதும் கற்பனையாக எழுதப்படும் சமூக வாழ்க்கை நவீனங்களுக்கும், சரித்திர சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதும் நவீனங்களுக்கும் ஒரு வேற்றுமை அவசியம் இருந்து தீருகிறது.

முற்றிலும் கற்பனை செய்யப்பட்ட கதைகளில் வரும் பாத்திரங்களில் எல்லாருக்கும் கதை ஆசிரியர் சுலபமாக முடிவு சொல்லி விடலாம். கதாநாயகனும் கதாநாயகியும் கலியாணம் செய்து கொண்ட பிறகோ, அல்லது கதாநாயகன் தூக்கு மேடை ஏறியும் கதாநாயகி கடலில் விழுந்தும் இறந்த பின்னரோ, கதையில் வரும் மற்றப் பாத்திரங்களை ஒரு பாராவில் சரிப்படுத்தி விடலாம். கலியாணம் செய்து கொண்ட தம்பதிகள் பிள்ளை குட்டி பேரர்களைப் பெற்று நெடுங்காலம் சுகமாக வாழ்ந்தார்கள் என்றும், மற்றக் கதா பாத்திரங்களில் நல்லவர்கள் எல்லாரும் சுகமடைந்தார்கள் என்றும், கெட்டவர்கள் எல்லாரும் பல கஷ்டங்கள் பட்டுச் செத்தொழிந்தார்கள் அல்லது தக்க தண்டனை அடைந்தார்கள் என்றும் கூறிக் கதையைத் திருப்திகரமாக முடிக்கலாம்.

சரித்திரக் கதைகளை இந்த விதத்தில் முடிப்பது அவ்வளவு எளிய காரியமும் அன்று; உசிதமும் ஆகாது.

சரித்திரக் கதைகளில் வரும் பாத்திரங்களில் இறந்து போனவர்களைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் பிற்காலத்திலும் பற்பல காரியங்களில் ஈடுபடுவார்கள்; வெற்றியோ, தோல்வியோ சுகமோ துக்கமோ அடைவார்கள். அவற்றைக் குறித்து முன்னதாகவே சொல்லி விடுவது முறையாகுமா? அல்லது

ஆதாரங்களுடன் கூடிய விவரங்கள் இல்லாமல் முடிவான நிகழ்ச்சிகளைப் பற்றி மட்டும் சொல்லுவதுதான் உசிதமாகுமா?

கதையை எந்தக் காலத்தில் முடிக்கிறோமோ, அந்தக் காலத்தில் பாத்திரங்கள் இருந்த நிலைமையிலேயே விட்டு விடுவது தான் முறையென்று கருதினேன். ஆனால் இது பல நேயர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லையென்பதைக் காண்கிறேன். ஓரளவேனும் அவர்களைத் திருப்தி செய்விக்க வேண்டியது அவசியம் என்று உணருகிறேன்.

பல நேயர்கள் அறிந்து கொள்ள விரும்பும் விவரங்களைக் கேள்விகளின் ரூபத்தில் இதோ கோவைப் படுத்தித் தந்திருக்கிறேன்:—

1) வந்தியத் தேவர் இளவரசி குந்தவைப் பிராட்டியை மணந்தாரா?

2) கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையர் என்ன ஆனார்?

3) வீர வைஷ்ணவனான ஆழ்வார்க்கடியான் என்ன செய்தான்?

4) பொன்னியின் செல்வரின் பிரயாணம் என்ன ஆயிற்று?

5) பழைய மதுராந்தகரும் சின்னப் பழுவேட்டரையரின் மகளும் என்ன ஆனார்கள்?

6) நந்தினியினால் முடிசூட்டப்பட்ட இளம் பாண்டியனைப் பற்றிய விவரம் என்ன?

7) நந்தினியின் கதி என்ன?

8) வானதி விஷயமாகக் குடந்தை சோதிடர் கூறியவை பலித்தனவா?

9) ஆபத்துதவிகள் என்ன செய்தார்கள்?

மேற்கூறிய கேள்விகள் பலவற்றுக்குப் பதில் தமிழ்நாட்டுச் சரித்திரம் படித்தவர்கள் தாங்களே அறிந்து கொள்வார்கள். ஆயினும் அனைவருக்கும் திருப்தி அளிக்கும் பொருட்டு மேற்கண்ட கேள்விகள் எல்லாவற்றுக்கும் பதில் தந்து விடுகிறேன்.

1. மேலும் பல இடையூறுகளைத் தாண்டிய பிறகு குந்தவையும் வந்தியத் தேவனும் மணம் செய்து கொள்கிறார்கள். இருவரும் சோழ சாம்ராஜ்யத்தில் மிக மதிக்கப்படுகிறார்கள். தஞ்சைப் பெரிய கோவிலில் உள்ள கல்வெட்டு ஒன்றில், "இராஜ ராஜ தேவரின் திருத் தமக்கையார், வல்லவரையர் வந்தியத் தேவரின் மகாதேவியார், ஆழ்வார் பராந்தகர் குந்தவையார்" என்று பொறிக்கப்பட்டு விளங்குகிறது.

2. இரும்பு மனிதராகிய சின்னப் பழுவேட்டரையர் உயிர் பிழைத்துப் பல கஷ்டங்களை அநுபவித்த பிறகு ஊருக்குத் திரும்பி வருகிறார். சோழ சாம்ராஜ்யத்துக்குப் பல அரிய சேவைகள் புரிகிறார்.

3. வீர வைஷ்ணவன் ஆழ்வார்க்கடியான் தனது ஒற்றறியும் வேலையை மேலும் நடத்திக் கொண்டிருக்கிறான். நந்தினியும் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளும் செய்யும் சதித்திட்டங்களை அறிந்து வந்து சொல்கிறான்.

4. பொன்னியின் செல்வர் வந்தியத் தேவனுடன் பெரிய கடற் படை தயாரித்துக் கொண்டு கடற் கொள்ளைக் காரர்களை அடக்கிச் சோழ சாம்ராஜ்யத்தைக் கடல்களுக்கு அப்பால் உள்ள நாடுகளில் நிலை நாட்டுகிறார்.

உத்தம சோழருக்குப் பட்டம் கட்டிப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு அவர் இறந்ததும், பொன்னியின் செல்வர் சிங்காதனம் ஏறுகிறார். 'இராஜ ராஜ சோழன்' என்ற பட்டத்துடன் நீண்ட காலம் சோழ சாம்ராஜ்யத்தை ஆளுகிறார்.

5. பழைய மதுராந்தகன் ஆபத்துதவிகளின் தூண்டுதலாலும் ஈழ மன்னன், சேர மன்னன் உதவி கொண்டும் பாண்டியநாட்டைக் கவர்ந்து முடி சூடிக் கொள்ள முயல்கிறான். அவனுடைய முயற்சி பெரிதும் பலம் பெறுகிறது. இராஜ ராஜ சோழர் பட்டத்துக்கு வந்த பிறகு அமரபுஜங்கன் நெடுசெழியனைப் போரில் வெல்கிறார். அவன் வீர சொர்க்கம் எய்துகிறான்.

6. திருப்புறம்பயம் காட்டில் முடிசூட்டப்



* அருள்மொழி வர்மன்



* வந்தியத்தேவன்



* குந்தவைப் பிராட்டி



* ஆதித்த கரிகாலன்



* நந்தினி



* மதுராந்தகத் தேவன்

பட்ட இளம் பாண்டியனும் பாண்டிய ராஜ்யத்துக்கு உரிமை கொண்டாடுகிறான். அவன் போர்க்களத்திலிருந்து தப்பிச் சென்று மறுபடியும் நாட்டைப் பெறச் சதி செய்கிறான். இவன் பிற்காலத்தில் இராஜேந்திர சோழனால் போரில் முறியடிக்கப்படுகிறான்.

7. நந்தினி அமரபுஜங்கன் இறந்த பிறகு தானும் உயிர் துறக்கிறாள். அதற்கு முன்னால் அவளை இராஜ ராஜ சோழர் சந்திக்கிறார். அவரிடம் தன் பிறப்பைக் குறித்த உண்மையையும் கரிகாலரின் மரணத்தைப் பற்றிய உண்மையையும் கூறிவிட்டு இறக்கிறாள்.

8. குடந்தை சோதிடரின் கூற்றுக்கள் வானதியின் விஷயத்தில் பலிக்கின்றன. (சோதிடர் சாஸ்திரம் பார்த்துச் சொன்னாரா? ஊகத்தினால் சொன்னாரா. நாம் அறியோம்.) வானதிக்குப் பிறக்கும் குழந்தையான இராஜேந்திரன் 'கங்கையும் கடாரமும் கொண்ட சோழன்' என்று பிற்காலத்தில் சரித்திரத்தில் புகழ் பெறுகிறான்.

ஆனால் வானதி தன் சபதத்தை நிறைவேற்றி விட்டு உயிர் துறக்கிறாள். இராஜ இராஜனுடன் சோழ சிங்காதனம் ஏறுகிறவள் 'உலக மகாதேவி' என்னும் திருநாமம் கொண்ட இன்னொரு ராணியாவாள்.

9. ஆபத்துதவிகள் பாண்டிய ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் முயற்சிகளில் மேலும் ஈடு பட்டு வருகிறார்கள். நந்தினி உயிரோடு இருந்த வரையில் ஆதித்த கரிகாலனுடைய அகால மரண இரகசியத்தைப் பற்றி விசாரிக்கப் படவில்லை. அதில் நந்தினியின் பெயரும் வரும் என்ற காரணத்தினால்தான். நந்தினியின் மரணத்துக்குப் பிறகு. இராஜ ராஜ சோழன் ரவிதாஸன் முதலிய ஆபத்துதவிகளைக் கைப்பற்றித் தண்டனை விதித்து அவர்களுடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்யவும் கட்டளை பிறப்பிக்கிறான்.

நேயர்கள் அவ்வளவாகக் கவலைப் ப..த இன்னும் சில கதா பாத்திரங்களைப் பற்றிய விவரங்களையும் கூறி விடுகிறேன்.

சுந்தர சோழர் காஞ்சி பொன் மாளிகையில் மூன்று ஆண்டு காலம் வசித்து விட்டு அங்கேயே உயிர் துறந்து 'பொன் மாளிகைத் துஞ்சிய தேவர்' என்று பெயர் பெறுகிறார். அவருடைய அருமை மனைவி வானமா தேவி, — மலையமானுடைய மகள், — அவருடன் உடன்கட்டை ஏறிச் சொர்க்கம் அடைகிறாள்.

பார்த்திபேந்திரன் குந்தவை தன்னை நிராகரித்து விட்ட கோபத்தினால் காஞ்சியில் சுதந்திர பல்லவ ராஜ்யத்தை நிலை நிறுத்தப் பார்க்கிறான். அதில் தோல்வியடைந்து சந்ததியில்லாமல் மாண்டு போகிறான்.

கந்தமாறன் பாலாற்றின் வட மேற்கில் புதிய மாளிகை கட்டிக் கொண்டு சோழ சாம்ராஜ்யத்துக்குத் தொண்டு செய்து வாழ்கிறான். 'அவனுக்குப் பின்னால் சம்பு வரையர் குலம் மிகப் பிரசித்தி அடைகிறது.

நேயர்களைத் திருப்திப் படுத்துவதற்காகவே மேலே கண்டவற்றை எழுதினேன். உண்மையில், இவையெல்லாம் இன்னும் ஒரு பெரிய சரித்திரக் கதைக்கு ஆதாரமாகக் கூடிய முக்கிய நிகழ்ச்சிகளாகும்.

உத்தம சோழருக்குப் பின்னால் சிங்காதனம் ஏறிய இராஜராஜன், இராஜேந்திரன், இராஜாதி ராஜன், வீர இராஜேந்திரன், குலோத்துங்க சோழன் முதலிய சோழப் பேரரசர்களின் காலத்திய மகோந்நத நிகழ்ச்சிகள் 'பொன்னியின் செல்வன்' கதையைப் போல் பல சரித்திரக் கதைகள் புனைவதற்கு ஆதாரமாகக் கூடியவை.

இந்தக் கதையின் ஆசிரியரைக் காட்டிலும் அறிவிலும் ஆற்றலிலும் ஆராய்ச்சியிலும் மிக்கவர்கள் வருங் காலத்தில் சோழ சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட பல மகோந்நதமான நவீனங்களை எழுதித் தமிழகத்துக்கு மேலும் மேலும் தொண்டு செய்வார்கள் என்று நம்புகிறேன்.

# எங்கள் பாதுகாப்புப் பேழைகளைக் கையாள்வது குழந்தை விளையாட்டே!



உங்கள் தேவைக்கேற்ற பல அளவுகள்:
கம்ப்யூட்டர் இயக்கம், தானியங்கிக் கதவுகள்,
அடையாள அட்டைகள்... இன்னும் பல நவீன
முறைகள்:

முழுவதும் புதுமையானது.
குளிர்சாதன அமைப்புடையது.
கோட்டை போலக் கட்டப்பட்டது.

மதிப்பு மிக்க உங்கள் உடைமைகளை பாதுகாக்க
ஆண்டு ஒன்றுக்கு ரூ. 10 முதல் 20 வரை
செலுத்துக. பேழைகளில் உங்கள் செல்வங்களைப்
பாதுகாத்து நிறைவு பெறுக.



**நாளொன்றுக்கு 2.7 பைசாவிற்கு மட்டுமே ஒரு பாதுகாப்பு பேழையை பி.எல்.பைனான்ஸ் உங்களுக்கு வழங்குகிறது.**

முழு விவரங்கள் அடங்கிய பிரசுரத்தை
எனக்கு அனுப்ப வேண்டுகிறேன்:

பெயர்: ..............................

முகவரி: ..............................

தொலைபேசி: ..............................

பி.எல். பைனான்ஸ் அண்ட்
இன்வெஸ்ட்மெண்ட் லிட்.
8, மேக்நிகல்ஸ் சாலை, சென்னை-600 031.
ஃபோன்: 473584



## பி எல் பைனான்ஸ்
அண்டு இன்வெஸ்ட்மெண்ட் லிமிடெட்

பதிவு அலுவலகம்: ''கஸ்தூரி'' முதல் தளம், 6 ஸ்மித் ரோடு, சென்னை-600 002.
நிர்வாக அலுவலகம்: 1, அபெக்ஸ் சேம்பர்ஸ், 20, தியாகராய ரோடு, பாண்டிபஜார், தி.நகர்,
சென்னை-600 017 ஃபோன்: 440810.
பாதுகாப்புப் பெட்டக மையம்: ''ஜான்மான்ஸ்'' 8, மேக்நிகல்ஸ் ரோடு, சேத்துப்பட்டு,
சென்னை-600 031. ஃபோன்: 473584.

உங்கள் உடைமைகளைப் பாதுகாப்பது பி எல் பைனான்ஸ் பாதுகாப்பு பெட்டகம்.

**125 ஆண்டு பியர்ஸ் லெஸ்லியின் ஓர் அங்கம்**

**ஆரோக்கிய ரகசியம்:**
**வி. என். குமாரசாமி.**



17

உடலின் அதிசயமான இயக்க சக்தி பற்றி இன்றைய விஞ்ஞான யுகத்திலும் எல்லா விவரங்களும் தெரிந்து விட்டதாகக் கொள்வதற்கில்லை. பதில் தெரியாத கேள்விகள் இன்னும் உள்ளன. உதாரணத்துக்கு ஒன்று: நாம் எதைத் தின்றாலும் ஜீரணித்துத் தள்ளும் இரைப்பை, தன்னைத்தானே ஏன் ஜீரணித்துக் கொண்டு விடவில்லை?

''வயிறு உயிருடன் இருக்கிறது. அதனால் அது தன்னைத்தானே ஜீரணிக்கவில்லை'' என்று ஒரு காரணம் கூறப்பட்டது. அதனால் உயிருடன் ஒரு தவளையை விழுங்கி வைத்தார் ஒரு விஞ்ஞானி! அது ஜீரணமாகி விட்டது!

விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்கப்படாத சரீர ரகசியங்கள் பல உள்ளன. என்றாலும் தெரிந்த வரையில் பார்த்தாலே பிரமிப்பாக

# சர்வாங்காசனம்

இருக்கிறது! உதாரணத்துக்கு, லிவர் எனப்படும் கல்லீரல் மட்டும் 42 விதமான வேலைகளைச் செய்கிறது என்று கண்டறியப்பட்டிருக்கிறது!

சரீரத்தில் உள்ள சூட்சம கோளங்கள் பற்றி ஏற்கெனவே ஹலாசனத்தின் போது சொன்னேன். இந்த நாளமில்லாச் சுரப்பிகளிலிருந்து சுரக்கும் ஹார்மோன்கள் பற்றியும் விவரித்தேன். இந்தக் கோளங்கள் ஒன்றையொன்று சார்ந்து பணிபுரிகின்றன. இவற்றில் முக்கியமானது பிட்யூட்டரி எனப்படும் ராஜ கோளம். தலையில் மூளைப் பகுதியில் உள்ள இதில் சுரக்கும் ஹார்மோன் மற்ற கோளங்களையும் நிர்வகிக்கிறது.

பிட்யூட்டரிக்கு அடுத்தபடியாகக்கழுத்துப் பகுதியில் தைராய்ட் கோளங்கள் இரு பக்கங்களிலும் இரண்டு உள்ளன. இவை வாலிபப் பருவத்தில் உடல் வளர்ச்சியை ஊக்குவிக்கின்றன. உயரமாக வளரச் செய்கின்றன. வாலிப வயது கடந்ததும் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தவும் செய்கின்றன. தைராய்ட் சுரப்பி கோளாறினால் இந்தக் கட்டுப்பாடு நீங்கினால் விபரீதம்தான்! சிலர் 'பொத பொத'வென்று குண்டாக வளர்ந்திருப்பதையும் சிலர் வளர்ச்சி குன்றிக்குட்டையாக இருப்பதையும் காணலாம். ''தைராய்டு பிராப்ளம்'' என்று பேசுவதையும் கேட்டிருக்கலாம்.

தைராய்டு பிரச்னை ஏதும் வராமலிருப்பதுடன், தைராய்டு சரியான விதத்தில் இயங்கி, உடல் வளர்ச்சியை நேரான பாதையில் கட்டுப்படுத்திக் கொண்டு செல்ல வேண்டுமானால் அந்தக் கோளத்துக்குத் தேகப் பயிற்சியின் பலன் கிட்ட வேண்டும்.

அது சர்வாங்காசனத்தில்தான் கிடைக்கிறது. சர்வாங்காசனம் செய்து வருபவர்களின் தைராய்டு சீராக இயங்குவதால், வாலிபப் பருவத்தில் உடலின் வளர்ச்சி சிறப்பாக அமைவதோடு, நடுத்தர வயதிலும் முதுமையிலும் கூட வாலிபத்தின் சுறுசுறுப்புடனும், வாலிபக் களையுடனும், தேஜஸுடனும் விளங்க முடியும்!

தைராய்டு ஹார்மோனை மாத்திரை ஊசி மூலமும் பெறலாம். ஆனால் இதனால் வேண்டாத உடன் விளைவுகள் ஏற்படக்கூடும். டாக்டர்களே ஹார்மோன் சிகிச்சை அளிக்க ரொம்ப யோசிப்பார்கள். 'ஆபத்து உண்டு; சர்வ ஜாக்கிரதையாகக் கையாள வேண்டும்' என்று நினைப்பார்கள்.

எதற்கு மருந்தும் மாயமும்? இயற்கையான யோகாசன வழி இருக்கிறது. சர்வாங்காசனம் இருக்கிறது. அதற்குத் தைராய்டை ஊக்குவிக்கும் சக்தி இருக்கிறது. தைராய்ட் நன்றாக இயங்கினால் மற்ற சுரப்பிகளையும் அது உற்சாகப்படுத்தி விடும். வேண்டாத உடன் விளைவுகள் இல்லை. ஆபத்து ஏதுமில்லை.

**தை**ராய்ட் கோளமானது கழுத்தில் குரல் வளையையொட்டினாற்போல் இரு பக்கமும் இருக்கிறது. தாமரை இலை வடிவம். ஒன்றரை

அங்குல நீளம், ஒரு அங்குல அகலத்தில் தட்டையாக இருக்கும். மத்தியில் அரைக்கால் அங்குலத்துக்குக் கனத்து, ஓரங்களில் மெலிதாய் இருக்கும். இத்தனை சிறிய உறுப்புக்குத்தான் எத்தனை சக்தி! மனிதனை மனிதனாக வாழச் செய்வதே இதுதான்! இத்தகைய சக்தி மிக்க தைராய்டுக்கு சக்தி அளிப்பது சர்வாங்காசனம்!

தைராய்டை ஊக்குவிப்பது தவிர சர்வாங்காசனத்துக்கு வேறு எத்தனையோ பல பலன்களும் உண்டு. உண்மையில் அதனைக் "காசு வாங்காத டாக்டர்" என்றே சொல்லலாம். உடல் குறை, மனக் குறை எதையும் அண்ட விடாத உற்ற நண்பன் சர்வாங்காசனம்.

படுக்கையில் மல்லாந்து படுக்கவும். பின் இரண்டு கால்களையும் நேராய்த் தூக்கவும். இரண்டு கைகளையும் மடக்கி, முழங்கைகளை ஊன்றி, மூச்சுப் பிடித்து, கால்களையும், புருஷ்டத்தையும், இடுப்பையும் சேர்ந்தாற் போல் தலைப் பக்கம் தூக்கிச் சாய்க்கவும். கைகளால் படத்தில் உள்ளது போல் இடுப்புக்குக்கீழே பிடித்து, உடலை நேராய் நிமிர்த்திக் கொள்ளவும். தலையை முன்னுக்குச் சாய்த்து முகவாய்க் கட்டையை மார்பில் அழுந்தும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். கால்களைத் தூக்கி, கைகளால் முதுகைப் பிடித்துக் கொண்ட பின், மூச்சைச் சாதாரணமாக விடவும் வாங்கவும் செய்யலாம். முதுகும் கால்களும் நேராய் இருக்க வேண்டும். கால்களை விரைப்பாய் வைத்துக் கொள்ளக் கூடாது. மிகத் தளர்த்தியாய்த் தொய்ய விடவும் கூடாது. வாய்மூடி இருக்க வேண்டும். முழங்கால் மடங்கக் கூடாது. இதைத்தான் சர்வாங்காசனம் என்பது.

கால்களை விரைப்பாய் வைத்துக் கொண்டால் இரத்தம் அந்த இடங்களுக்கு அதிகமாகச் செல்ல நேரும். மனமும் அதிலேயே ஈடுபடும். சர்வாங்காசனத்தில் ரத்தமும் மனமும் தைராய்டிலும் நெஞ்சிலும் ஈடுபட வேண்டுமாதலால் அனாவசிய இடங்களுக்குப் போகக் கூடாது. கால்களைத் தொய்ய விட்டால் அதிக நேரம் ஆசன நிலையில் நிற்கமுடியாது. ஆசன நிலை சரியாகவும் அமையாது.

ஆசனம் செய்து முடிந்து கீழே இறங்கும் போது, இடுப்பின் அடியில் தாங்கும் கைகளைத் தளர்த்தி, கைகளின் மேலேயே உடலை நழுவ விட்டுக் கொண்டு வந்து, கால்களைப் பூமி மேல் அமர்த்தி, கைகளைப் பக்கங்களில் உடலையொட்டி வைத்துத் தளர விட்டு இளைப்பாறவும். திடீரென்று கால்களைப் 'பொத்'தென்று தரையில் போடக் கூடாது.

அநேகருக்கு இரண்டு கால்களை மட்டும் தான் தூக்க வரும். புருஷ்டத்தையும் இடுப்பையும் சேர்ந்தாற்போல் தூக்கவே வராது. என்னதான் கைகளையும் முழங்கைகளையும் ஊன்றினாலும் இடுப்புக்குக்கீழ் உள்ள பாகம் மேலே எழும்பாது. 'நமக்காவது சர்வாங்காசனம் செய்ய வருவதாவது' என்று அலுத்துக் கொண்டு விட்டு விடப் பார்ப்பார்கள். ஆனால் மனம் வைத்தால் ஆகாத காரியம் இல்லை. மனம் தளராமல் மறுநாள், அதற்கு அடுத்த நாள், நான்காம் நாள் என்று சிறிது சிறிதாக முயற்சி எடுத்துப் பயின்றால் ஒரு வாரம், பத்து நாளில் சுலபமாகி விடும். ஹலாசனம் செய்து பழகியவர்களுக்குச் சர்வாங்காசனம் எளிதாக வரும். ஹலாசனத்தில் கால்கள் பின்னால் போய்த் தரையைத் தொட வேண்டும். சர்வாங்காசனத்தில் கால்களைத் தலைக்கு நேராய்க் கொண்டு நிறுத்தினால் போதும். எவ்வளவு தூரம் இடுப்பின் கீழ் கைகளால் பிடித்துக் கொள்கிறோமோ அவ்வளவுக்கு நம் முதுகு நேராய் நிமிரும். கால்களும் நேராய் நிற்கும்.

மனம் சலிப்படையாதிருக்க நாம் உணர வேண்டிய விஷயம் என்னவென்றால், கொஞ்சம் முன்னே பின்னே ஆசன நிலை இருந்தாலும் அந்த அளவுக்குப் பலன் கிடைக்க ஆரம்பித்து விடுகிறது என்பதுதான்! ஆனால் அத்துடன் திருப்தி அடையாமல் நூற்றுக்கு நூறு சரியான நிலையை அடையும் ஆர்வத்துடன் தொடர்ந்து செய்து வர வேண்டும்.

உதாரணமாக, கால்கள் இரண்டும் தலைக்கு நேராய் இருக்க வேண்டும் என்பது முறையானாலும் ஆரம்பத்தில் அதிக நேரம் செய்ய நினைப்பவர் சற்று தலைக்குப் பின்பு சாய்த்துக் கொண்டாலும் பாதகமில்லை. அப்போதுதான் கை வலிக்காது. அதற்கென்று அதிகமாகச் சாய்ந்து விடவும் கூடாது. சரியான நிலைக்கு வர வேண்டும் என்ற உணர்வு இருந்து கொண்டே இருக்க வேண்டும். ஆரம்பத்தில் எல்லோருக்குமே முழங்கை உறுத்தும். எரியும். பழகி வந்தால் காய்ச்சிப் போய்ச்சரியாகி விடும்.

இந்த ஆசன நிலையில் முதலில் ஒரு நிமிஷம் இருந்தாலே பெரிய காரியம். பிறகு படிப்படியாக நாளைக்கு அரை நிமிஷம் அதிகரித்துக் கொண்டே போய், பத்து நிமிஷங்கள் வரை குறைந்தபட்சமாக சர்வாங்காசன நிலையில் இருக்க வேண்டும். அதிகபட்சமாக அரை மணி நேரம் மட்டுமே இருக்கலாம்.

ஒவ்வொரு ஆசனமும் செய்து முடித்த பிறகு அரை நிமிஷம், ஒரு நிமிஷம் மல்லாந்து படுத்தபடி, கட்டாயம் ஓய்வு எடுக்க வேண்டும். அன்றையப் போதுக்கு ஆசனம் செய்து முடித்த பிறகு, கண்டிப்பாக இரண்டு நிமிஷமாவது மல்லாந்து படுத்து, உடலைத் தளர்த்தி, கண்களை மூடி, மனத்தை இதயத் தாமரையில் குவித்து, உடல் ஆரோக்கியத்துக்காகப் பிரார்த்திக்க வேண்டும்.

(தொடரும்)

படம்: **உத்ரா**

* சிதாராவின் பேட்டி, ஒரு நடிகையின் பேட்டியைப் போல் அல்லாமல், நம் குடும்பத்தில் உள்ள பெண் ஒருவருடன் பேசுவதைப் போல வெகு இயல்பாக இருந்தது. அட்டைப்படமும் கொள்ளை அழகு!

மானம்புச்சாவடி. இரா. ஆதிநாராயணன்.




* சிதாராவிடம் பேட்டி எடுத்து வெளியிட்டிருப்பது வித்தியாசமாய்த்தான் இருக்கது. இருப்பினும் ஒரு சந்தேகம் சார். அவர் "சித்தாரா"வா அல்லது "சிதாரா"வா? கேட்டுச் சொல்லுங்களேன்!

சேலம் — 2. கே. ஜனார்த்தனன்.

('சிதாரா' என்று அழைக்கப்படுவதையே சிதாரா விரும்புகிறார். — ஆர்.)

* "ரூ. 4000 கோடி சிக்கனம் எங்ஙனம்?" — தெளிவானதொரு தலையங்கம் எழுதியதோடு, பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான வழிகளையும் சொல்லியிருக்கிறீர்களே... அதுதான் பாராட்டுக்குரியது.

சென்னை — 1.

டி. வி. எஸ். பாலகுமாரன்.

* சிக்கன வேகம் முழுவதும், இன்றைய மத்திய மாநில அரசுகள் சிக்கலைத்தைப் பற்றிப் பேசுவதும் ஒன்றுதான். தொலைநோக்குத் திட்டங்கள் போடாமல், தொலைந்து போகும் திட்டங்கள் போடுவதாலும், இலவசத் திட்டங்களைத் தொடர்ந்து அறிவித்து, மக்களை மேலும் மேலும் கையேந்த வைக்கும் நிலைக்குத் தள்ளுவதாலும் எந்த விதச் சிக்கன நடவடிக்கையும் பயன் தர முடியாது. இதை உணர்வார்களா? வருமுன் காப்பார்களா? காலம்தான் பதில் சொல்ல வேண்டும்.

சென்னை — 92.

கே. ராஜ்கோபால்.

* மத்தியதர வர்க்கக் குடும்பப் பெண்கள் எப்படி "வரவுக்கேற்ற" செலவு என்ற கண்களை விற்றுப் "போலிகௌரவம்" என்ற சித்திரம் வாங்கத் துடிக்கிறார்கள் என்பதை, "நிறங்கள்" கதையின் மூலம் வெகு யதார்த்தமாகச் சித்திரித்த பாரதிபாலனுக்கு எனது பாராட்டுக்கள்!

சென்னை — 32. ஆர். திலகவதி.

* பண்பு மிக்க பண்பாளர், பத்மநாபாவைப் படுகொலை செய்யும் 'பண்பு(?)' எந்தப் 'பண்பாளருக்கு(?)' வந்ததோ, அந்த அரங்கனுக்குத்தான் வெளிச்சம்!

திருச்சி — 21. கிஷோர்.

* மெக்காவில் நடந்தது விபத்தோ, சதி வேலையோ... எதுவாயினும் போன உயிர்கள் மீண்டும் உயிர்த்தெழப் போவதில்லை. இனிமேலாவது இது போன்ற உயிர்ச்சேதம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது, சௌதி அரேபிய அரசின் கடமையாகும் என்பதை அந்த அரசு உணர வேண்டும்.

சேலம். ரவிமயில்.

* தமிழககாங்கிரஸை ஒருதாக்குத் தாக்க வேண்டுமென்று கொக்கு போல ஒற்றைக் காலில் தவம் இருந்தீரா? — நீங்கள் கேட்டவை பகுதியில் (குழப்பம் விளைவிக்கும் கட்சி) ஒரு பிடி பிடித்து விட்டீரே!

திருச்சி — 2. ஆற்காடு எழிலன்.

* படித்து விட்டால் போதும் உடனே வேலை வீடு தேடி வந்து விட வேண்டும்; இல்லை என்றால் அரசாங்கத்தையும் மற்றவர்களையும் குறை சொல்லிக் கொண்டு, வீணாகத் திரிந்து, வீட்டிற்கும், நாட்டிற்கும் நஷ்டமாயிருக்கும் இளைஞர்களுக்குக் கருப்பையாவின் கடுமையான உழைப்பும், படிப்படியான உயர்வும் குறித்த கட்டுரை 'டானிக்' போன்றது!

சென்னை — 21. அ. க. சுகுமாரன்.

* இதைப் பாருங்க! சினிமாச் செய்திகளைப் போடுங்க. வேணாங்கலை, ஆனா, செய்தி ஏதுமில்லாமலேயே 'ஐஸ்வர்யா'வின் படத்தைப் போட்டு 'ஐஸ்' வைப்பது ஏனென்று புரியவில்லை...!

மேல்பட்டி. 'விழியரசி'

(யார் கண்ணிலும் படாமல் நழுவிவிட்ட தவறைச் சடக்கென்று கண்டுபிடித்த மேல்பட்டிக்காரர் 'விழியரசி' என்று புனைபெயர் வைத்துக் கொண்டிருப்பது பொருத்தம்தான். — ஆர்.)

* பெரும்பாலும் குடும்பப் பிரச்னைகளை மையமாகக் கொண்ட சிறுகதைகளையே படித்துக்கொண்டிருந்த சமயம் அகிலா கார்த்திகேயனின், "அமைச்சரின் ஆசி பெற்றவன்" என்ற ஹாஸ்யச் சிறுகதை வித்தியாசமாக இருந்தது. பாராட்டுக்கள்.

தஞ்சாவூர். மா. அபிராமவிஜயன்.

* சென்னையைப் பற்றிய குறிப்புக்களில் ஐஸ் ஹவுஸ் (விவேகானந்தர் இல்லம்) பற்றி எழுதியிருந்தீர்கள்! இதை இரண்டு மாதங்களுக்கு முன்பே எழுதியிருக்கக் கூடாதா? எனது அண்ணன் பெண், "ஐஸ் ஹவுஸிலிருந்து விவேகானந்தர் இல்லத்திற்கு எவ்வளவு தூரமிருக்கும்?" என்று கேட்க, நானும் சென்னையைப் பற்றி அதிகம் தெரிந்தவன் போல் சுமார் இரண்டு கிலோமீட்டர் இருக்கும் என்று கூறிவிட்டேன். கல்வி படித்த பிறகுதான் அறிந்து அசடு வழிந்தேன்.

திருப்பாச்சேத்தி.

ஒ. பாண்டிராஜன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: டி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.

ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

பருவமிது
சாக்லேட்
சாப்பிடுவதற்கு

"ஏன் ஒரு சாக்லேட்டும் என் உறுதியான ஸிபாகா பற்களை கெடுக்க முடியவில்லை?"

இது சாதாரணம், பாருங்களேன். நான் சாக்லேட்களை கபளீகரம் செய்வது போல, வழக்கமாக ஸிபாகா ஃப்ளோரைட் உபயோகித்து என்னுடைய பற்களைத் தேய்க்கிறேன்.

ஸிபாகாவினுடைய செறிப்பான நுரை சுத்தப்படுத்தி எல்லா சாக்லேட் துணுக்குகளை நீக்குகிறது. அதனுடைய பிரத்தியேகமான ஃபார்முலா பற்கள் கெட்டுப் போகாமல் பாதுகாக்கிறது.

ஆகையால் ஸிபாகா ஃப்ளோரைடுக்கு நன்றி. என் முப்பத்திரண்டு பற்களும் பளிச்சிடும் வெண்மையுடன் வாழ்நாள் முழுவதும் உறுதியாக இருக்கும் சாக்லேட் எல்லாம் இருந்தும் கூட.

பற்களுக்கு பலம். என்றென்றும் தரும்.




ULKA-13196 TAM

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka

இந்தியாவிலேயே முதல் முறையாக

# எப்போதும் உலர்ந்த உணர்வு+ மும்மடங்கு ஈர்ப்பு

## கண்டேன் பிரிமாவை கொண்டேன் மகிழ்ச்சி!

ஆம்... அதிநவீன ரோஸ் நிற பிரிமா தான் இரண்டு தனிச்சிறப்பு அம்சங்களைக் கொண்ட - இந்தியாவின் முதல் சானிட்டரி நாப்கின்.



பிரிமாவின் பிரத்யேகமான மென்மையான **எப்போதும் உலர்ந்த** மேலுறை ஈரத்தை உறிஞ்சிக் கொள்வதோடு - உங்களுக்கு தூய உணர்வையும் உலர்ந்த தன்மையையும் அளிக்கிறது.



பிரிமாவின் **மூன்று உள்மடிப்புகள்** மிக அதிகமான உறிஞ்சும் தன்மையை அளிக்கிறது.

இத்துடன் -
அதிக இதம் தரும் வளைந்த ஓரங்கள்;
கூடுதல் பாதுகாப்பு அளித்திடும்
ரோஸ் நிற பிளாஸ்டிக் கவசம்.




PRIMA
Clean & Dry
Sanitary Napkins

ரெகுலர்: • பெல்ட் • பெல்ட்லெஸ் எக்ஸ்ட்ரா லார்ஜ்: • பெல்ட் • பெல்ட்லெஸ்
10 நாப்கின்கள் கொண்ட பாக்கெட்களும், 8 நாப்கின்கள் கொண்ட கைக்கு அடக்கமான பாக்கெட்களும்

ப்ரீமியர் மில்ஸ் குழு அளித்திடும் No. 1 தயாரிப்பு

**வாங்குவீர் பிரிமா,**
**அந்த உண்மையான—தூய மற்றும் உலர்ந்த தன்மையை உணர்ந்திட**